நினைவுத் திரையில்...

சுதந்திரமும் சுபிட்சமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. சுதந்திரம் இல்லாத நாட்டில் சுபிட்சம் மலர்வது அரிது. சுபிட்சம் இல்லாத நாட்டில் சுதந்திரம் நீடித்திருப்பது அரிது.

ஒரு தேசம் சுபிட்சத்தை அடைவது முதலாவதாக அந்த நாட்டின் இயற்கை வளத்தைப் பொறுத்தது: இரண்டாவதாக, அரசாங்கத்தார் கையாளும் பொருளாதாரத் திட்டங்களைப் பொறுத்தது: மூன்றாவதாகப் பொது ஜனங்களின் ஊக்கத்தையும் ஒத்துழைப்பையும் பொறுத்தது.

கல்கி தலையங்கம், ஏப்ரல் 3, 1949

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ, ஆனி 19 - ஜூலை 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



மலர் 25 ● இதழ் 49



# மன்னிப்பதற்கில்லை

சில பொருட்களின் இறக்குமதியைத் தாராளமாக்குவதற்குச் சர்க்கார் எடுத்துள்ள நடவடிக்கைகள் நாட்டு நலனுக்கு உகந்தவையே. உள் நோக்கம் எதுவாயினும், கட்டுப்பாட்டுத் தளர்ச்சி எவ்வளவு குறைந்தகாலத்துக்கு இருப்பினும் இதை வரவேற்க வேண்டும். எனினும் இந்தச் சலுகைகளைப் பெறும் மக்கள் இதை மிகையாக மதித்து ஏமாந்து போகாமலிருக்க வேண்டும். தேர்தல் காலத்தை உத்தேசித்துச் செய்யப்பட்ட உதவிகளாலும் சலுகைகளாலும் அரசியல் கருத்துக்களை மாற்றிக் கொள்வது தவறாகும். நிரந்தரமான கொள்கைகளையும், போக்குகளையும் வைத்தே வாக்காளர்கள் தங்களது அரசியல் அறிவைப் பிரயோகிக்க வேண்டும். காங்கிரஸின் ஏகாதிபத்தியப் போக்கு எவ்வளவு வேகமாகப் பரவி வருகிறது என்பதை மக்கள் உணரவேண்டும். வர வர சர்க்காரும் கட்சியும் ஒன்றாகப் போய் வருவதைக் கவனிக்க வேண்டும். எதிர்க்கட்சியை வளரவிடாமல் செய்கிற ஏக-கட்சி ஆட்சியின் தீமைகளை எண்ணிப் பார்க்கவேண்டும். பதினெட்டாண்டுகளாக நடைபெற்ற காங்கிரஸ் ஆட்சியில் நாம் அடைந்துள்ள நிதரிசனமான நஷ்டங்களை உணர்ந்து, இதனால் தேசம் எவ்வளவு அழிவு அடைந்துவிட்டது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். காலம் கடந்து போவதற்கு முன்னமே ஜனநாயகத்தைக் காக்க வேண்டும் என்பதை மக்கள் நினைவில் வைத்து நடந்து கொள்ள வேண்டும். இப்போதே ரொம்பவும் காலதாமதம் செய்து விட்டோம். ஒவ்வொருவரின் சொந்த வாழ்க்கையிலும் புகுந்து சுருக்கு மாட்டுவதற்கு ஆள்கிற கட்சியின் கையில் கயிற்றைக் கொடுத்து விட்டோம். இதனால் தேர்தலின்மூலம் சர்க்காரை அகற்றுவதை மிகவும் சிரமசாத்தியமாக்கி விட்டோம். இனியேனும் அதிக ஜாக்கிரதை செய்து கொள்ள வேண்டியது அவசியம்.

இங்கிலாந்திலுள்ள ஒவ்வொரு தொழிலாளியும் தான் குடிக்கிற ஒவ்வொரு கோப்பைத் தேநீருக்கும், புகைக்கிற ஒவ்வொரு சிகரெட்டுக்கும் 'வரி தருகிறோம்' என்று உணர்ந்திருக்கிறார். தேநீர்க் கடையிலோ, சிகரெட்டுக் கடையிலோ இந்த வரி போட்டு வசூலிக்கப்படவில்லை என்றும் அவருக்குத் தெரியும். துறைமுகத்தில் இந்தப் பண்டங்கள் கப்பலிலிருந்து இறங்கியவுடனே வரி போட்டு வசூலிக்கப்படுகிறது என்று அவர் அறிவார். வரியைத் தான் நேரடியாகச் சர்க்காருக்குத் தராவிட்டாலும், தன்னால் வரி கொடுக்கப்படுகிறது என்பது அந்நாட்டுத் தொழிலாளிக்குத் தெரியும். இதனால்தான் தொழிற் கட்சி சர்க்காராயினும் சரி, கன்ஸர்வேடிவ் சர்க்காராயினும் சரி, அது தேயிலை மீதோ புகையிலை மீதோ உள்ள வரியைச் சிறிது உயர்த்தினாலும் அந்தத் தொழிலாளி உடனே அதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறார். ஆனால் நம் நாட்டிலோ நிலைமை வேறு. ஆங்கிலத்தில் பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதத் தெரிந்தவர்களும்கூட, 'நாற்பத்தைந்து கோடி மக்களில் இருபத்து மூன்று லட்சம் பேர்களேதான் வரி செலுத்துகிறார்கள். இந்தப் பணக்காரர்கள் பங்கில்தான் ராஜாஜி பேசுகிறார்' என்று எழுதுகிறார்கள். 'காங்கிரஸ் கட்சியோ நாற்பத்தைந்து கோடி மக்களின் நலனுக்காகவும் ஓய்வு ஒழிவு இன்றி உழைக்கிறது' என்று எழுதுகிறார்கள். காங்கிரஸுக்காகக் கட்சி பேசுகிற இவர்களுக்கு உண்மை தெரியுமாயினும் மறைத்துப் பேசுகிறார்கள். வெற்றிலை போடும் ஒவ்வோர் ஏழையும் இந்திய சர்க்காருக்கு வரி செலுத்துகிறான். மானத்தைக் காத்துக் கொள்ளவும் வெய்யில், குளிரிலிருந்து காப்புப் பெறவும் நாலு முழம்

துணி வாங்குபவனும், சிம்னி விளக்குக்காக ஒரு புட்டி மண்ணெண்ணெய் வாங்கும் ஏழைப் பெண்மணியும் கவலையை மறக்க மீனத்துப் பீடித் துண்டுபிடிக்கும் ஒவ்வொருவனும் இந்தப் பொருள்களுக்காக வரி செலுத்துகிறார்கள். இதைப் படித்தவர்கள் அறிந்திருந்தும், மறைத்துப் பேசுகிறார்கள். சர்க்காருக்கு முன்கூட்டியே வரி தந்துவிட்ட கடைக்காரரிடம் மக்கள் விலையோடு விலையாக வரிப் பணத்தையும் சேர்த்துத் தருகிறார்கள். புகையிலை, மண்ணெண்ணெய், சைக்கிள், அதன் பாகங்கள், டயர், காகிதம், லவங்கம் முதலிய வாசனைச் சாமான்கள், செயற்கை இழைத் துணிகள், பருத்தித் துணி, பருத்தி நூல், சர்க்கரை, தீக்குச்சி, காப்பி, தேயிலை, பாதரட்சை, ஸோப், சிமெண்ட், தாவர எண்ணெய்கள், பித்தளை தாமிரம் இவற்றாலான பண்டங்கள், கொப்பரை முதலிய எண்ணற்ற பல பொருட்களின் மீது மத்திய சர்க்கார் வசூலிக்கும் மொத்த வரித் தொகை 1635 கோடி ரூபாயாகும். இந்த வரிகள் பண்டங்களை வாங்கி உபயோகிக்கும் நாற்பத்தைந்து கோடி மக்களின் மீதும் விழுபவை. கம்பெனிகளின் மீதும் தனி மனிதர்கள் மீதும் விதிக்கப்படும் வருமான வரித் தொகை 670 கோடி ரூபாய் எனில், மக்கள் வாங்கும் பண்டங்களின் மீதுள்ள வரிப் பளுவோ அதைப் போல இரண்டு மடங்குக்கும் அதிகமாக உள்ளது.

நேரடி வரிகளைத் தரும் கம்பெனிகளும் தனிமனிதர்களும்கூட இறுதியில் வரிச் சுமையைப் பொருள் வாங்கும் பொது மக்கள் மீதுதான் தள்ளி விடுகிறார்கள். இமயமலையின் மீது பெய்கிற மழை உச்சியிலேயே உறைந்து பனிக் கட்டியாகி விடுகிறது. கோடை காலம் வந்தவுடன் இந்தப் பனி உருகி, நதியாகி, கீழேயுள்ள பள்ளத் தாக்குகளுக்குப் பாய்கிறது. இது இங்கிலாந்துத் தொழிலாளிக்குத் தெரியும். பணக்காரர்களின் மூலம் ஏழைகளுக்கு வரி போடப்படுகிறது என்பதை அவர் அறிவார். ஆனால் இந்தியத் தொழிலாளியோ அறியாதவராக இருக்கிறார். அறியக் கூடியவர்களும் காங்கிரஸ் சதிக் கூட்டத்தில் சேர்ந்து ஏழைகளை ஏமாற்றுகிறார்கள்; 'ஏழைகளுக்கு வரி இல்லை' என்கிறார்கள்.

நம் நாட்டில் காங்கிரஸ் கட்சியொன்றே தொடர்ச்சியாக ஆட்சி நடத்தி, யுத்தமோ, வேறு பெரிய ஆபத்து நிலையோ இல்லாத போதிலும், நாட்டின் பொருளாதாரம் குப்புற விழுவதற்குக் காரணமாயிருக்கிறது. அது கருணையின்றி எவ்வளவு வரி விதிப்பதற்கும் அனுமதித்திருக்கிறோம்; சுபிட்ச நிலையில் உள்ள உலக நாடுகள் எல்லாவற்றிடமிருந்தும் உதவி பெற அதை அனுமதித்திருக்கிறோம். அப்படியும் அது நம்மை மஞ்சள் கடிதாசு கொடுக்கிற நிலைக்குக் கொண்டு வந்து விட்டது. ரூபாயின் வெளிநாட்டு மதிப்பை முப்பத்தாறு சதவிகிதம் குறைத்திருப்பது, இந்த மஞ்சள் கடுதாசு நிலையைப் பகிரங்கமாக ஒப்புக் கொள்வதேயாகும். இனியும் ஐந்தாண்டுகளுக்கு இதே கட்சி தலைதெறிக்கச் சர்க்காரை ஓட்டிச் செல்ல நாம் அனுமதிக்கக் கூடாது. அது இப்போது தன் பழைய தவறுகளை ஒப்புக் கொள்வதற்காகவோ, புதிய சலுகைகள் அளிப்பதற்காகவோ அதை மன்னிப்பதற்கில்லை. அதைப் பதவி நீக்கம் செய்தேயாக வேண்டும்.

உள் நாட்டில் பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சியும், வெளிநாடுகளில் கப்பரை ஏந்திப் பிட்சையும் நடத்துகிற அரசாங்கத்தை மாற்றி, கட்சி நலனைக் கருதாது தேச நலனில் மட்டுமே பற்றுக் கொண்டுள்ள நேர்மையான பெரியோர்களைக் கொண்ட தன்மானமுள்ள சர்க்காரை ஏற்படுத்த வேண்டும். இல்லாவிடில் இந்நாட்டுக்கு விமோசனமே கிடையாது. திருடுவது குற்றம், கொள்ளையடிப்பது அதைவிடக் குற்றம், கொலை செய்வது மரண தண்டனைக்குரிய குற்றம். அரசாங்கத்தை எதிர்த்துப் போர் தொடுப்பதும் குற்றமே. ஆனால் இங்கு பெரிய குற்றவாளியே ஆட்சிபுரிகிறான். ஆரம்ப கால முகமதியர் ஆட்சியில் தொடங்கி, முகலாய, பிரிட்டிஷ் ராஜ்யங்களிலும், இந்த நூற்றாண்டின் முதல் பாதியிலும்கூட நிலையான மதிப்புப் பெற்றிருந்த நம் நாணயத்தின் மதிப்பை இப்போது குறைத்திருப்பதன் மூலம் குற்றவாளி தன் குற்றத்தைப் பகிரங்கப் படுத்தியிருக்கிறான். சமீப காலம் வரையில் 'ஸ்டெர்லிங்' இருப்பு வைத்திருந்த தேசத்தைப் பெருங் கடனாளியாக்கி, நாட்டை நாசம் செய்த குற்றவாளியைத் தேசத் துரோகி என்று யாரும் கூறவில்லை; குற்றக் கூண்டில் ஏற்றி விசாரணை செய்யவில்லை. அந்தக் குற்றவாளியே தேர்தல் சமயத்தில் கூட ஆட்சியிலிருந்து இறங்காமல் வாக்காளர்களைப் பயமுறுத்தவும், வெட்கமில்லாமல் தனக்கே இன்னொரு பதவிக் காலத்துக்கும் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்று கேட்கவும் அனுமதித்திருக்கிறோம்.

# விபத்திலும் பெரிய விபத்து

**மா**துங்கா ரயில் விபத்தை அடுத்து, ஆஜ்மீரருகே வாட்புராவில் ஒரு பயங்கரமான ரயில் விபத்து நிகழ்ந்ததைக் கேள்விப்பட்டு அதிர்ச்சியடைந்தோம். 'ஸிக்னல்' இயக்கத்திலேயே அடிக்கடி தவறுகள் நேரிட்டு, அது காரணமாக விபத்துக்கள் ஏற்படுவதைப் பார்க்கும்போது இது அகஸ்மாத்தாக நிகழுவதுதானா என்ற பயங்கரமான சந்தேகமும் மனத்தின் அடித்தளத்தில் எழும்பத்தான் செய்கிறது. பம்பாய் மெயில் பாதையில் ஹினேந்துரு குல்பர்கா பிரிவில் ஒரு மைல் நீளத்துக்கு இணைப்பு ஆணிகள் அகற்றப்பட்டிருப்பதாக வெகு சமீபத்தில் வந்திருந்த செய்தி இந்தச் சந்தேகத்தை வலியுறுத்து



திருச்சி திராவிட முன்னேற்றக் கழக மாநாட்டுக்கு வந்திருந்த திரளான கூட்டத்தின் ஒரு பகுதி. மாநாட்டில் தலைவர் அண்ணாதுரைக்கு ரூபாய் நோட்டு மாலையை அணிவித்து மகிழ்கிறார் நடிகர் ஆனந்தன்.

கிறது. நல்லவேளையாக மெயில் விபத்திலிருந்து தப்பியது. உயிர்ச்சேதம் விளைவிக்கும் நாச வேலைகளைப் பற்றிய ஐயப்பாடு ஒருபுறமிருக்க, வெளிப்படையாகவே குல்பர்கா முதலிய இடங்களில் மைசூர்–மகாராஷ்டிரா எல்லைத் தகராறு காரணமாக ரயில்கள் மீது கல் வீசுவதும், சூறையாடுவதும் சகஜமாகி வருகின்றன. உயிர்ச்சேதத்தை விட மக்களின் உள்ளப் பாங்குக்கு ஏற்பட்டுள்ள இந்தச் சேதம் குறைந்த விபத்தல்ல.

இவையெல்லாவற்றையும் விடப் பெரிய விபத்து, ஆஜ்மீர் ரயில் விபத்தின்போது கஷ்ட நிவாரணமளிப்பதில் அதிகாரிகள் காட்டிய போக்குத்தான். ஆஜ்மீருக்கு ஐந்தே மைலில் லாட்புராவில் இவ்விபத்து நேர்ந்திருந்தபோதிலும் இந்த இடம் ஜயப்பூர் நிர்வாகப் பிரிவைச் சேர்ந்தது என்ற காரணத்துக்காக ஆஜ்மீர் அதிகாரிகள் கஷ்ட நிவாரணத்துக்குப் பொறுப்பு ஏற்காமல் பல உயிர்கள் முடிவதற்குக் காரணமாயிருந்தனர் என்று கூறப்படுகிறது. ரயில்வே அதிகாரிகளிடையே தங்கள் பொறுப்புக்கள் பற்றி நீண்ட நேர காரசார விவாதம் நடைபெற்று முடிவதற்குள் குற்றுயிரும் குலை உயிருமாக இருந்தவர்கள் பட்ட இன்னல் சொல்லி முடியாதாம். முதலில் உதவிக்கு அனுப்பி வைத்த 'கிரேனை'க்கூடப் பிறகு ஆஜ்மீருக்கு எடுத்துக் கொண்டு போய்விட்டதாகப் படிக்கும்போது இப்படியும் ஓர் இதயமின்மை இருக்க முடியுமா என்றே ஆச்சரியமாயிருக்கிறது. படுகாயமுற்றவர்களை ஏற்றிச் செல்லும் வண்டி கிளம்பவே மூன்று மணி நேரம் தாமதமாயிற்றாம். அதிகார வர்க்கம் மனிதாபிமானத்தைத் துடைத்து விட்டு விதிமுறைகள், அந்தஸ்து, அதிகார எல்லை இவற்றையே பெரிதாகக் கருதுமாயின் அதைவிடத் தேசத்துக்கு விபரீதம் எதுவுமில்லை.

# விசாகையும் பொகாரோவும்

**வி**சாகப்பட்டினத்தில் பெரிதாக உருக்கு ஆலை எழுப்பும் கருத்தைப் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் ஆதரிக்கவில்லை. நாட்டு நிதி நிலைமையில் பிரம்மாண்டமான ஆலை எழுப்புவதற்கில்லை என்றும் சிறிய அளவிலேயே திட்டமிடவேண்டும் என்றும் பேசியிருக்கிறார். மிகவும் வரவேற்க வேண்டிய கருத்து.

தமிழக மந்திரி ஸ்ரீ ஆர். வேங்கடராமன் அவர்களோ தற்போது நிச்சயமாகிவிட்ட பொகாரோ உருக்கு ஆலைத் திட்டமும் கூட நமது நிலைக்குச் சாத்தியமற்றது என்று தைரியமாக எடுத்துக் காட்டியிருக்கிறார். எத்தனையோ சிறிய தொழில்களுக்குக் கிடைக்கக்கூடிய உதவியை நிறுத்தி நாட்டின் இராணிக்கு மிஞ்சிய இந்தப் பெரும் திட்டத்தில் இப்போது ஈடுபடுவது உசிதமல்ல என்று குறிப்புக் காட்டியிருக்கிறார்.

விசாகப்பட்டினம், பொகாரோ ஆகிய உருக்காலைகளோடு மட்டும் இது நின்றுவிடவில்லை. எந்தத் துறையிலுமே சக்திக்கு மீறிய திட்டம் போடக் கூடாது என்பதுதான் பொது உண்மை. இந்த உண்மையைச் சுதந்திரக் கட்சி ஆதியிலிருந்தே எடுத்துக் காட்டியும் காங்கிரஸ் ஜமீன்தார்கள் காதில் போட்டுக்கொள்ளாததன் விளைவை நன்றாக அநுபவித்து வருகிறோம். இனியேனும் திட்டங்களை வெட்டுவதில் பிரதமர் துணிச்சலுடன் இயங்க வேண்டும். ஸ்ரீ ஆர். வி. போன்றவர்களும் துணிவுடன் குறைபாடுகளை எடுத்துக் காட்டி, உண்மையாகவே தொழில் வளம் பெருகுவதற்கு யோசனைகளைக் கூறவேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

★

ரூபாயின் மதிப்பைக் குறைத்ததை நான் ஆட்சேபிப்பதாகவும், சுதந்திரக் கட்சியின் பொதுக் காரியதரிசி மஸானி அவர்கள் அதை ஆதரிப்பதாகவும் சில கம்யூனிஸ்டுகளும் மற்றவர்களும் பிரசாரம் செய்து வருகிறார்கள். 'முன்னேற்ற முன்னணி'யில் பேசிய போது இது எவ்வளவு தவறான கருத்து என்பதை ஸ்ரீ மஸானி விளக்கியிருக்கிறார். ''புயல் வீசுகிறதென்றால் அதை நீங்கள் ஆதரிப்பதாகவோ ஆட்சேபிப்பதாகவோ சொல்வதில் பொருள் உண்டா? அதைப் போன்றதுதான் ரூபாயின் மதிப்புக் குறைவை ஆதரிப்பது பற்றியும் ஆட்சேபிப்பது பற்றியும் பேசுவது. ரூபாயின் மதிப்பைக் குறைத்தது ஒரு முடிந்து போன விஷயமாகி, அந்த உண்மைக்கு நாம் முகம் கொடுத்தாக வேண்டிய சமயத்தில் அதைப்பற்றிக் கட்சி — பிரதி கட்சிக்கு இடமேயில்லை'' என்றார் ஸ்ரீ மஸானி.

ரூபாயின் மதிப்பைக் குறைப்பதற்கான காரணங்களைப் பற்றி நான், மஸானி இருவருமே மிகவும் வருந்துகிறோம். சுதந்திரம் வந்தபோது ரூபாய்க்கு இருந்த மதிப்பில் சரி பாதியாக இப்போது தேய்ந்துவிட்டது என்ற நடைமுறை உண்மையை ஒப்புக்கொள்ள மறுப்பது நல்லதல்ல என்றே நாங்கள் இருவரும் கருதுகிறோம். காங்கிரஸின் முட்டாள்தனமான பேராசை, வரம்பற்ற செலவு, அஜாக்கிரதையான கடன்கள் இவற்றால்தான் மதிப்பை மாற்றும் நிலை ஏற்பட்டது என்பதில் எங்கள் இருவருக்கும் தெளிவான நிச்சய புத்தி உண்டு. இத்தனை ஊழலான நிர்வாகத்துக்குப் பின் ஒரு நாழிகைகூட காங்கிரஸை ஆட்சியில் வைத்திருக்கக் கூடாது என்பதிலும் எங்களுக்கு ஒரே அபிப்பிராயம்தான். பிராயச்சித்தமாகக் காங்கிரஸ் கட்சி உடனுக்குடன் கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதில் எங்களிடையே கருத்து மாறுபாடு கிடையாது. ஒரே கொள்கையைப் பிடிவாதமாகக் கடைப்பிடிக்கும் காங்கிரஸ் தன் போக்கை மாற்றிக் கொள்ளாதாகையால் சர்க்காரையே மாற்ற வேண்டும் என்று என்னைப் போலவே மஸானியும் கருதுகிறார். சர்வதேசப் பொருளாதார உலகில் இந்தியா புனர்வாழ்வு பெறுவதற்கும், கௌரவத்துடன் நாம் இன்னல்களைக் கடப்பதற்கும் இதுவே வழி.

★

கிழக்குப் பாகிஸ்தானில் மத்திய பாகிஸ்தான் சர்க்காரின் ஆட்சியை எதிர்த்துச் சுயாட்சி கோருவோரின் கிளர்ச்சிகளை ஆதரித்து நமது பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது. இந்தியாவில் எந்த ராஜ்யத்திலும் சுயாட்சிக் கருத்து வெளியிடப்படாதவாறு பிரிவினைப் பேச்சைக் குற்றமாக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்று நமது உள்துறை மந்திரி நந்தா அவர்கள் கருதுவதும் இச்செய்தித் தாள்களில் இதே பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது. இந்த முரணான கருத்துக்களுக்கு எளிதில் விளக்கம் கூறிவிடலாம். எனினும், இது விசித்திரமாகத்தான் இருக்கிறது. எவ்வாறாயினும், இது தாஷ்கென்ட் உணர்ச்சிக்கு அநுகூலமாக இல்லை.

★

ஒத்துழைக்க வேண்டியவர்களின் ஐக்கியத்தைக் குலைத்து அவநம்பிக்கை ஊட்டுவதும், பூசல்களை மூட்டிவிடும் கட்டுப்பாடுகளும் 'நிலச் சீர்திருத்தம்' என்ற பெயரில் உலவி வருகின்றன. கூடிய சீக்கிரத்திலேயே இந்தச் 'சீர்திருத்தங்களின்' விளைவாக விவசாயிகள் யாவரும் சர்க்கார் அதிகாரிகளின் கீழ் நிர்ப்பந்தமாக உழைக்கும் தொழிலாளிகளாவர் என்பது நிச்சயம். கிராம மக்களின் சுதந்திரமும் சுபிட்சமும் எப்படிப் போனாலும் அதைக் கவனியாது நகரத்திலிருப்பவர்களுக்கு உணவு படைக்க வேண்டும் என்ற பொறுப்பைச் சர்க்கார் ஏற்றிருப்பதால் இப்படித்தான் நேரவேண்டியிருக்கும். மானியம் கொடுத்தோ, அல்லது நிர்ப்பந்தக் கொள்முதல் செய்தோ நகரத்திலிருப்பவர்களுக்குத் தானியங்களை மலிவாக விற்க வேண்டியிருக்கும். இதுவே சோஷலிஸத் திட்டத்தின் தவிர்க்க முடியாத துணையம்சம்.

★

குஜராத்தியரின் கிராமப் பண்பில் உண்டான ஒரு பழமொழியைப் பார்க்கும் போது சர்க்கார் சர்வாதிபத்தியம் என்பது புதிய நிலைமையல்ல என்று தோன்றுகிறது.

**ராஜா பனே வ்யாபாரி தோ**
**ப்ரஜா பனே பிகாரி**

என்கிறது அப்பழமொழி. 'அரசன் வியாபாரம் செய்யத் தொடங்கினால் மக்கள் பிச்சை எடுக்க வேண்டியதுதான்' என்பது பொருள்.

இதையேதான் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ருஷ்ய சரித்திர ஆசிரியர் கிலியுசெவ்ஸ்கியும், ''சர்க்கார் பெருத்தால் மக்கள் சுருங்க வேண்டியதுதான்'' என்று கூறினார்.

★

வெளிநாடுகளின் நிர்ப்பந்தத்தின் மீதே ரூபாயின் மதிப்புக் குறைக்கப்பட்டிருக்கிறது என்ற குற்றச்சாட்டு அர்த்தமில்லாதது. உலக பாங்கியிடம் மிகவும் அதிகமாகக் கடன்பட்டுள்ள நாடு இந்தியாவே. சுமார் 74 கோடி டாலர் கடன்பட்டிருக்கிறோம். இந்தியாவுக்கு உதவக்கூடிய நாடுகளிலிருந்து நமக்குக் கடன் பெற்றுத் தரவும் துணை புரிவது உலக பாங்குதான். எனவே, நாம் அந்நியக் கடன்களைத் தீர்க்க இயலாதவர்களாக இருக்கிறோம் என்று உலக பாங்கு உணரும் போது, நமது ஏற்றுமதிகளைப் பெருக்கினாலே அந்நிய நாணயம் நமக்குக் கிடைக்குமென்றும் இதற்காக நாம் ரூபாய் மதிப்பைக் குறைக்க வேண்டும் என்றும் நட்பு முறையில் வற்புறுத்துவது இயற்கையே. இதை அந்நியர் நிர்ப்பந்தம் என்று கருதக் கூடாது என்கிறார் பேராசிரியர் ஷெனாய். 'நாம் மிகவும் நுட்பமான உணர்ச்சியுள்ளவர்களாயின் கடனே வாங்கக் கூடாது. கடன் வாங்கத்தான் வேண்டுமெனில் நமது நுட்ப உணர்ச்சியை விடத்தான் வேண்டும்' என்பது பேராசிரியரின் கருத்து.

"உஷ்!
அந்தப்
பாரி
மிட்டாய்கள்
என் பங்கு"



பிறருடன்
பங்கிட்டு
ருசித்து
மகிழுங்கள்.
பாரி
மிட்டாய்
இருக்கையில்
வாழ்க்கை
மேலும்
இனிக்கிறது




பாரி உயர்தர மிட்டாய் தயாரிப்பவர்கள்

ருசித்திருக்கிறீர்களா? ஹெல்த் ப்ரூட்ஸ் ● ஜிஞ்சர்கேப்ஸ் ●
லெமன் 'பார்லீ' கோகோனட்ஸ் ● மில்க் டாபி

பாரி கன்.பெக்ஷனரி லிமிடெட். மதராஸ்.

JWT-PRS-3639

## செய்திப் படங்கள்



தொழில் அதிபர்கள் அனந்தராம கிருஷ்ணன், டி. வி. சுந்தரமய்யங்கார் திருவுருவப் படங்களைத் தொழில் மந்திரி திரு ஆர். வெங்கடராமன் தேனும்பேட்டை ஆட்டமோபைல் இன்ஜினீயர்கள் இன்ஸ்டிட்யூட்டில் திறந்து வைத்தார். இவ்வைபவத்துக்கு அமெரிக்க கான்சல் ஜெனரல் ஆல்பர்ட் பிராங்க்ளின் தலைமை வகித்தார்.



பம்பாய் பைன் ஆர்ட்ஸ் கிரியேஷன்ஸார் மே மாதம் 19ந் தேதி 'கொலையைத் தேடி' என்ற மர்ம நாடகத்தைத் திறம்பட நடித்துப் பாராட்டைப் பெற்றனர். இந்நாடகம் திரு சங்கர் தலைமையில் மாதுங்கா போதார் கல்லூரியில் நடந்தது.

★

ஜூன் மாதம் ஏழாந் தேதி சத்தியமூர்த்தி பவனில் 'இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி' என்ற நூலைத் திரு அலென் அவர்கள் தலைமையில், முதன்மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்கள் வெளியிட்டார்.



# 8. பொன்பெற்ற பண்




**கோ**ட்புலி நாயனர் என்று ஓர் அடியார். திருநாட்டியத்தான் குடியில் வாழ்ந்த அவர், சேனபதியாகஇருந்ததோடு சிவபெருமான் விற்றிருந்தருளும் திருக் கோயிலுக்கு வேண்டும் திருவமுதுக்குரிய செந்நெல்லைச் சேர்த்தளிக்கும் திருத்தொண்டினையும் மேற்கொண்டிருந்தார். அவர் சுந்தரரிடம் சென்று திருவடி தொழுது, தம் ஊருக்கு எழுந்தருளுமாறு அவரை வேண்டினர். நம்பியாரூரர் இசைந்தார். மகிழ்ந்து ஊர் திரும்பினர் கோட்புலியார். தம்பிரான் தோழர் தியாகப் பெருமானை வணங்கி, பிற திருத்தலங்களையும் வணங்கிக் கொண்டு திருநாட்டியத்தான் குடியை அடைந்தார். கோட்புலியார் வீதியையும் வீட்டினையும் அலங்கரித்து எதிர்கொண்டு வணங்கித் தமது மனைக்கு அழைத்துக் கொண்டு சென்றார். தம்பிரான் தோழரைத் தம் இல்லத்தில் பொற்பீடத்து இருத்தித் திருவடியை நீரால் விளக்கினர். அப்பாத தீர்த்தத்தை வீடு முழுவதும் தெளித்தார். சுந்தரரை நறுமலர் களினல் அருச்சித்தார். தூபதீபங் காட்டி, மலர் மாலை சூட்டி வழிபட்டுத் திருவமுது செய்வித்தார். சேனபதியாகிய அக்கோட்புலியார் தமது அருமைப் புதல்விகளாகிய சிங்கடியார், வனப் பகையார் என்ற இருவரையும் வணங்கச் செய்து, தாமும் வணங்கினர். ''எம்மையாட்கொள்ளும் எந்தையே! அடியேனது புதல்விகளை அடிமையாக்கிக் கொண்டு அருள்புரிய வேண்டும்'' என்று விண்ணப்பம் செய்து கொண்டார். சுந்தரர் அவ்விருவரையும் தமது புதல்வியராகக் கொண்டு, மடித்தலத்தில் வைத்து, கருணையுடன் உச்சி மோந்து, விரும்பிய பொருள்களைக் கொடுத்து, சிவாலயத்துக்கு அவர்களுடன் சென்று கோட்புலி நாயனரின் வேண்டுகோளை நிறைவு செய்தார். தாம் அருளிய பதிகங்களுட் சிங்கடியப்பன், வனப்பகையப்பன் எனத் தம்மைக் குறித்துக் கொண்டார்.

நம்பியாரூரர் நாட்டியத்தான் குடியினின்றும் புறப்பட்டுத் திருவலிவலம் சென்று மாதொருபாகனுகிய பெருமானைக் கண்டு மகிழ்ந்து தரிசித்தார்.

''நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி
யேத்துகப்பானைத்
தொண்டனே னறியாமை யறிந்து
கல்லியன் மனத்தைக் கசிவித்துக்
கழலடிகாட்டி யென்
களைகளையறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின்றானை
வலிவலந்தனில் வந்து கண்டேனே''

என்னும் பாடலால் இறைவனைப் போற்றித் தமக்கு முற்பட்ட அருளாளர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரும் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களில் சிவபெருமானுக்கு உள்ள ஈடுபாட்டினைக் குறிப்பிட்டுப் பாராட்டினர். மீண்டும் திருவாரூர் வந்து சேர்ந்தார்.

பங்குனி உத்திரத் திருநாள் நெருங்கியது. அத்திருவிழாவில் பரவையார் தானதருமங்கள் புரிய விரும்பினர். அதற்கான செல்வத்தைப் பெற என்ன உபாயம் என்று எண்ணியிருந்தார் நம்பியாரூரர். பொய்ம்மையாளரான மானுடரை யாசிக்க அவர் விரும்பவில்லை. தமது க்ஷேத்திராடனத்தில் திருப்புகலூர் என்னும் தலத்தில் அவர் கோயிலின் முன்றிலில் தங்கியிருக்கும் போது திருவருளினல் துயில் வர, அங்கிருந்த செங்கற்களைக் கொணர்வித்து அடுக்கி, அவற்றின்மேல் தமது

வெண்பட்டாடையை விரித்துப் படுத்துக் கண் துயின்றார். அவருடன் வந்த அன்பர்களும் படுத்து உறங்கினர். நம்பியாரூரர் துயிலுணர்ந் தெழுந்த போது, செங்கற்கள் அனைத்தும் செம் பொன்கற்களாகத் திகழ்ந்தன.

'' தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே
யெந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ்சோறுங் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையேசிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே.''

புகலூர்ப் பெருமானின் திருவருளால் கிடைத்த பொற்குவையுடன் புறப்பட்டுத் திருப்பனையூர் அருகில் செல்லும் போது நிறைநதியும் குறை மதியும் அணிந்த நிமலனார் நிருத்த கோலத்துடன் காட்சியளித்தருளினார்.

'' மாட மாளிகை கோபுரத்தொடு
மண்டபம் வளரும் வளர்பொழிற்
பாடல் வண்டறையும்
பழனத் திருப்பனையூர்த்
தோடு பெய்தொரு காதினிற்குழை
தூங்கத் தொண்டர்கள் துள்ளிப்
பாடநின்
றூடு மாறு வல்லார்
அவரே அழகியரே ''

என்று இறைவன் காட்டியருளிய திருக்கூத்துத் தரிசனத்தைப் பாடிப் பரவித் திருவாரூரை அடைந்தார் சுவாமிகள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல திருத்தலங்களை வணங்கிக் கொண்டும், ஆங்காங்கு இறைவன் மீது திருப்பதிகங்கள் பாடிக் கொண்டும் சென்று, திருவாலம்பொழில் போய்ப் பெருமானை வழிபட்டுத் தங்கினார். அன்றிரவு கனவில் பெருமான் தோன்றி, ''மழபாடிக்கு வர மறந்தனையோ?'' என்று கூறியருளினார். நம்பியாரூரர் விழித்தெழுந்து காவிரியைக் கடந்து வட கரை போய், திருமழபாடி யடைந்து சிவபெருமானை அன்புடன் போற்றி,

'' பொன்னார் மேனியனே புலித்
தோலையரைக் கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்
கொன்றை யணிந்தவனே



மன்னே மாமணியே
மழபாடியுள் மாணிக்கமே
அன்னே புன்னையல்லால்
இனியாரை நினைக்கேனே''

என்று பாடினார். காவிரியின் இரு மருங்கிலும் உள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு, திருவானைக் காவினை யணுகி வணங்கிப் பதிகம் பாடினார்.

பின்னர் திருப்பாச்சிலாச்சிரமத்தை அடைந்து இறைவனைத் தொழுது பொன் வேண்டினார். இறைவன் உடனே தாராமையால், அவர் தமக்குத் தோழன் என்பதை உணர்ந்து அவரிடம் உரிமையுடன் கண்டனம் தெரிவிக்கலானார்.





குழந்தை: ஹெட்மாஸ்டர் சார்! பள்ளிக்கூடம் ரொம்பிப் போச்சு, இனிமே யாரையும் சேர்க்க முடியாதுன்னு அம்மாகிட்டே சொல்லி விட்டீங்களே! சாயங்காலம் காலியாத்தானே இருக்கும்? அப்ப என்னைச் சேர்த்துக்கோங்களேன்!

வைத்தனன் தனக்கே தலையுமென்னாவும்
நெஞ்சமும் வஞ்சமொன்றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக்கடிமை
யுரைத்தக்கா லுவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத்தோடு
பாச்சிலாச் சிரமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சிலராகில்
இவரலா தில்லையோ பிரானார்

என்று திருப்பதிகம் பாடினார். பாடல் தோறும் இவர் இல்லாவிட்டால் வேறு தெய்வமே இல்லாமற் போய்விட்டதோ என்று பொருள்பட "இவரலா இல்லையோ பிரானார்" என்று இகழ்ந்து கூறினார்.

இத்திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பில் இவ்வாறு இகழ்ந்துரைத்ததையும் பொறுத்து அருள் புரிவது இறைவரது கடமை என்பதை அன்பின் மிகுதியால் வற்புறுத்திப் போற்றினார். அன்புள்ளம் கொண்ட அடியார்கள் ஏசினாலும், இகழ்ந்தாலும் அருள்புரியும் சிவபெருமான் நம்பியாரூரது பேரன்புக்கு உளமிரங்கிப் பொற்குவைதந்தருளினார். இந்த அற்புதத்தை,

"புன்மைகள் பேசவும் பொன்னைத்
தந்தென்னைப் போகம் புணர்த்த
நன்மையினார்க்கிடமாவது நந்திரு
நாவலூரே...."

எனத் திருநாவலூரர்ப் பதிகத்தில் நம்பியாரூரர் போற்றுகின்றார்.

பொற்குவை பெற்ற சுந்தரர் திருப் பைஞ்ஞீலியையும் திரு ஈங்கோய் மலையையும் தரிசித்துக் கொங்குநாடு சென்றார். காவிரிக்குத் தென்கரையில் விளங்கும் கொடுமுடி சென்று,

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாத மேமனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேனினிப்
பிறவாத தன்மைவந் தெய்தினேன்
கற்றவர் தொழுதேத்துஞ்சீர்க்
கரையூரிற் பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநா நமச்சிவாயவே

என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடினார். பின்பு காஞ்சிவாய்ப் பேரூர்த் திருக்கோயிலை யடைந்தார். திருக்கோயிலுட் சென்றார். ஆனால் என்ன விந்தை! அங்கு இறைவரைக் காணவில்லை.

அங்கிருந்த இடபதேவரிடம், "இறைவர் யாண்டுள்ளார்?" என்று வினவினார். தாம் இருக்கும் இடத்தை நம்பியாரூரரிடம் சொல்லக் கூடாது என்று சுவாமி ஆணையிட்டிருந்தபடியால் இடபதேவர் வாயைத் திறந்து எதுவும் கூறாது, கண் குறிப்பினால் இறைவன் உள்ள இடத்தைச் சுட்டிக் காட்டினார்.

அக்குறிப்பின்படி நம்பியாரூரர் வயற் பக்கம் வந்தார். அங்குதான் இறைவர் இருந்தார். எந்தக் கோலத்தில்?

தாம் வயலில் உழவு செய்யும் பள்ளனாகவும், பார்வதியாகிய பச்சை நாயகி பள்ளியாகவும், சிவகணத் தலைவர்கள் மள்ளராகவும் அமைய, ஒரு புறம் உழுவதும், ஒருபுறம் நீர் பாய்ச்சுவதுமாக வேலை செய்து கொண்டிருந்தார். இலட்சுமி, சரஸ்வதி, இந்திராணி முதலிய தேவியர் பள்ளிகளாய் அப்பச்சைப் பள்ளியின் ஏவலைக் கேட்டுக் கழனியில் நாற்று நட்டனர்.

பெருமான் அவரைப் பாராதது போல, தமது வேலையிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். அதனைக் கண்டு மகிழ்ந்த ஆரூரர், "ஐயனே! முன்னர் என்பொருட்டு வேதியனாக வந்து விளையாடினாய்; மதுரை மாநகரில் அரசராக அரசு புரிந்தாய்; செட்டியாக வந்து வளையல் விற்றாய்; வலைஞனாக வந்து தேவியை மணந்து கொண்டாய்; விஜயன் பொருட்டு வேடனாக வந்தாய்; யாவரும் பணிவதாலும், பாம்பை அணிந்து கொண்டதாலும் 'பணிசிவன்' ஆயினை; முக்கண் பெற்ற நக்கனாதலின் 'முக்கணக்கன்' ஆயினை; அகத்தே பரிசுத்த சொரூபியாதலின் 'அம்பட்டன்' ஆயினை; புறத்தே முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய், வெட்ட வெளியாய்க் காலியாய் அருபியாய் நிற்றலின் 'புறத்ம்த காலி' ஆயினை; பாம்பை இடையில் அணிந்த


டுவின் டஸ்கர் துணிமணிகள்...
டுவின் டஸ்கர் துணிமணிகள்...
டுவின் டஸ்கர் துணிமணிகள்...
டுவின் டஸ்கர் துணிமணிகள்...

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

துலக்கலில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை அழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

சுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான சிரிப்பைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம்.
ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

காரணத்தால் 'அரவமாரிடையர்' ஆயினை; சோமாசி மாறனார் பொருட்டுப் 'பறைய'னாயினை; இன்று என் பொருட்டுப் 'பள்ளனும்' ஆயினை; என்னே உன் திருக்கூத்து!'' என்று வியந்து பாடினார்.

**மறையவ னரசன் செட்டி தன்தாதை**
**வயங்கு நாற் சூத்திரன் புவனம்**
**பறைதரு நல்ல சங்கரன் வேடன்**
**பணி சிவன் விளங்குமுக் கணக்க**
**ன்றைசெயம் பட்ட னகமது புறத்தே**
**காலியாட் டரவமா ரிடையன்**
**பறையனு முன்ன ரானநீ யின்று**
**பள்ளனு னமைதெரிந் தேன்யான்.**

''ஐயனே! உன் மூத்த பிள்ளையோ எண்ணிய பொருளெல்லாம் எளிதில் முற்றுறக் கூட்டுவிக்கும் கஜமுகப் பிள்ளை; இளைய பிள்ளையோ நிறை செல்வச் செட்டியார்; மனைவியோ அன்ன பூரணி; நண்பனோ குபேரன். இங்ஙனம் இருக்க நீ வயலில் வருந்தி உழுவது யார் பொருட்டு? '' என்று நம்பியூரார் வினவி உரையாடினார். இறைவர், திருக் கோயிலுக்கு நம்பி யாரூராருடன் சென்று தில்லை மன்றுள் நின்றாடும் தமது திருக் கோலத்தோடு காட்சி கொடுத்தருளினார். அவ்வழகிய காட்சியைக் கண்டு அளவிலாப் பேரானந்தம் அடைந்த ஆரூரர் கைகுவித்துக் கண்ணீர் சொரியத் தொழுதார்.

இதன் பின் பல திருப்பதிகளைத் தரிசித்து, நடுநாட்டில் திருக்கூடலையாற்றுக்குச் சமீபமாகச் சென்றார். அங்கு சென்றவர் திருக்கூடலையாற்றுக்குச் செல்லாமல் விருத்தாசலம் நோக்கிப் போனார். அப்பொழுது கூடலையாற்றில் கோயில் கொண்டருளிய சிவபெருமான் ஓர் அந்தணராகி வழியில் வந்தார். ''ஐயரே! திருமுதுகுன்றூருக்கு (விருத்தாசலம்) செல்லும் வழி எது?'' என்று கேட்டார். ''இவ்வழி கூடலையாற்றுக்குப் போகும் வழி'' என்று கூறிக் கொண்டே வழி காட்டிய வண்ணம் முன்னே சென்றார். எல்லை வரை வழிகாட்டிச் சென்ற இறைவர் திடீரென மறைந்தருளினார். உடன் வந்த அந்தணர் மறைந்ததைக் கண்ட நம்பியாரூரர் அவர் சிவபெருமானே என்று தெரிந்து தொழுதார். கூடலையாற்றூர் போய் வழிபட்டுவிட்டு அதற்குப் பின்பே திருமுதுகுன்றம் அடைந்தார்.

விருத்தாசலத்தில் பொன் வேண்டும் என நினைத்து இறைவனை வேண்டிப் பதிகம் பாடினார் சுந்தரர். பரமன் பன்னிரண்டாயிரம் பொன் தந்தருளினார். ''எந்தையே! திருவருள் தந்த இப்பொன் எல்லாம் திருவாரூரில் உன்



ளவர்கள் வியக்கும்படியாக அங்கு வரச் செய்ய வேண்டும்'' என்று ஆரூரர் வேண்டிக் கொண்டார். ''சுந்தரனே! இப் பொன்னை இம் மணிமுத்தா நதியி விட்டுப் பின்னர் திருவாரூர்க் கமலா லயக் குளத்தில் எடுத்துக் கொள்'' என ஓர் அசரீரி வாக்கு எழுந்தது.

ஆரூரர் பொன்னின் மச்சம் வெட்டி எடுத்துக் கொண்டு எல்லாப் பொன்னை யும் மணிமுத்தா நதியிவிட்டு ''என் ஐயனே! எளியேனை வலிதில் ஆட் கொண்ட திருவருளின் திறத்தை இதில் அறிவேன்'' என்று கூறி, அங் கிருந்து புறப்பட்டுக் கடம்பூர் முதலிய தலங்களைத் தரிசித்துத் தில்லையம்பதி வந்தார். அங்கு நடேசமூர்த்தியைக் கண் குளிரக் கண்டு, மற்றும் பல திருத்தலங்களைச் சேவித்துக் கொண்டு திருவாரூரை அடைந்தார்.

பூங்கோயிலிற் சென்று புற்றிடங் கொண்ட புண்ணியனைப் போற்றி, பரவையார் திருமாளிகைக்குச் சென் றுர் சுந்தரர். பரவையார் அவரைப் பணிந்து உபசரித்தார். ''நமக்கு நாய ஞர் விருத்தாசலத்தில் அளித்த பொற் குவியலை அங்குள்ள மணிமுத்தா நதியி விட்டேன். நீ சென்று இவ்வூர்த் திருக் குளத்தின் மேற்பால் தேடி எடுத்துக் கொள்வாயாக'' என்று கூறினர். ''இதென்ன அதிசயம்?'' என்று பரவை யார் ஐயத்துடன் புன்முறுவல் செய் தார். ''நாதன் அருளால் நான் எடுத் துத் தருகிறேன், வா'' எனப் பரவை யாருடன் ஆரூர்ப் பூங்கோயிலுக்குச் சென்று கமலாலயக் குளத்தினையணுகி அன்று அங்கு இட்டதனை எடுப்பவர் போல் தடவித் தேடினர். என்ன தேடியும் கிடைக்கவில்லை.

பாட்டில் விருப்புடைய பரமசிவம் பாடாது தேடினல் தருமோ? ஆதலால் திருவிளையாடலாகப் பொன்னை வரு விக்காமல் இருந்தார் ஈசன். நம்பியாரூ ரர் தேடித் தேடியும் பொன் கிடைக் காமற் போகவே, பரவையார் ''ஆற்றி விட்டுக் குளத்தில் தேடுகின்றீரோ?'' என்று கேட்டுப் புன்முறுவலுடன் பரி கசித்தார். அதனைக் கேட்ட வன் றெண்டர், ''இதுவும் உன் திருக் கூத்தோ?'' என்று பழமலைநாதரை நினைத்து,

பொன் செய்த மேனியீர் புலித்
தோலை யரைக் கிசைத்தீர்
முன்செய்த மூவெயிலு மெரித்
தீர்முது குன் றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள்
பரவை யிவள் தன்முகப்பே
யென் செய்த வாறடிக
ளடியே னிட்டளங் கெடவே,

என வரும் திருப்பதிகத்தைப் பாடினர். இவ்வாறு எட்டுப் பாடல்கள் பாடியும் பொற் குவியல் கிடைக்கவில்லை.

ஏத்தா திருந் தறியே
னிமை யோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக் கெல்லா
முது குன்ற மமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவை
யிவள்தன் முகப்பே
கூத்தா தந்தருள்வாய் கொடியே
னிட்டளங் கெடவே

என்னும் ஒன்பதாவது அருமைத் திருப் பாடலைப் பாடினர். பொற் குவியல் அப்படியே கிடைத்தது; அதை எடுத் துக் கரை சேர்த்தார். அதனைக் கண்டு பரவையாரும், பிறரும் அதிசயித்த னர்; இறைவன் இவரிடத்துக் காட்டும் திருவருளை நினைத்து வியந்தனர்.

ஆரூரர் குளத்திலிருந்து எடுத்த பொன்னின் மாற்றினை உரைத்துப் பார்த்தார். அது முன்னர் இருந்த மாற்றுக்குத் தாழ்ந்திருந்ததைக் கண் டார். உடனே, மீண்டும் பதிகம் பாடி னர். பொன்னின் மாற்று உயர்ந்து சிறந்த செம்பொன்னாயிற்று. அப் பொற் குவியலைப் பரவையார் வீட் டுக்கு அனுப்பிவிட்டுத் திருக் கோயில் சென்று தியாகேசனைத் தொழுது பாடி னர். சிறிது காலம் பரவையாருடன் இறை நினைவுடன் இனிதே இல்லறம் நடத்தினர். (தொடரும்)



## ''கோழிமுட்டை! - ஒருதரம்! இரண்டுதரம்!''

சீர்காழியில் கலைஞர் மு. கருணாநிதியின் பொதுக்கூட்டத்தில் அவருக்கு அன்பளிப்பாக ஒரு கோழியும், இரண்டு சேவல்களும், ஒரு முட்டையும் அளிக்கப்பட்டன. அவைகளைத் தேர்தல் நிதியாக்கும் பொருட்டு கருணாநிதி அவர்களே ஏலம் விட்டார். முதலாவதாக ஏலம் விடப்பட்ட கோழி 8 ரூபாய்க்கும், இரண்டாவதாகச் சேவல் ரூபாய் 8க்கும், மூன்றாவ தாகச் சேவல் ரூபாய் 10க்கும் விலை போயின. இறுதியாக கோழிமுட்டை ஏலத்துக்குக் கொண்டு வரப்பட்டது. அது ரூபாய் 9க்கு வாங்கப்பட்டபோது, கருணாநிதியே ஆச்சரியத்தில் மூழ்கினர். —தகவல்: கிருத்திவாசன்



மோட்டார்க் கார் உற்பத்தித் துறையில் திருவனந்தபுரம் திரு கே. ஏ. பாலகிருஷ்ணமேனன் ஓர் அபூர்வ சாதனையை நிகழ்த்தியிருக்கிறார்.

சமீபத்தில் ஒரு நாள் சென்னை நகர வீதிகளில் அவர் ஓட்டிச் சென்ற 'அரவிந்த்' மோட்டார் காரைப் பார்த்தவர்கள், அதை திரு மேனன், எந்த வெளி நாட்டுத் தூதுவரிடமிருந்து வாங்கியிருப்பார் என்று கணக்குப் போட்டுப் பார்க்க ஆரம்பித்தார்களே தவிர, அதை அவரே திட்டமிட்டுத் தம் பட்டறையில் உருவாக்கியிருக்கிறார் என்று ஊகித்தார்களில்லை!

பல வருடங்களாக மோட்டார்க் கார் மந்திரநுணுக்கங்களை அறிவதில் அவர் காட்டி வந்த ஆர்வமும் பதினைந்து வருடங்களுக்கு மேலாக இயங்கிவரும் அவருடைய சொந்த மோட்டார் ரிப்பேர்த் தொழில் பட்டறையும் அவருடைய கைத் திறமைக்கும் கற்பனைக்கும் உரமிட்டன.....



# 'அரவிந்'த மோட்டார் கண்டோம்

"மிஸ்டர் மேனன்! உங்கள் 'அரவிந்'தில் பிரயாணம் செய்வது சுகமாகத்தான் இருக்கிறது! இது 'மாதிரி'க் கார் என்ற முறையில் விசேஷ கவனம் எடுத்துத் தயாரித்திருப்பீர்கள்! மலிவு ரகக் கார்கள் உற்பத்தி செய்யும் உங்கள் திட்டத்தில் இத்தனை வசதிகளையும் செய்து கொடுக்க முடியுமா?"

"நிச்சயமாகக் கொடுக்க முடியும் என்று நம்புகிறேன். இந்த 'அரவிந்த்' ஒரு மீடியம்-அதாவது நடுத்தரக் காரைத்தான் குறிக்கிறது. இப்போது கிடைக்கும் அம்பாஸிடர் காரைப் போல என்று வைத்துக் கொள்ளலாம். என்னுடைய திட்டத்தில் இதன் அடக்க விலை எட்டாயிரம் ரூபாயில் நிற்க வேண்டும்."

"வேறு ரகங்களுக்கும் உங்கள் திட்டத்தில் இடமுண்டோ?"

"நமக்கு மொத்தம் மூன்று ரகங்கள் தேவைப்படும் என்பது என் அபிப்பிராயம். ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய் அடக்கவிலையில் இரண்டு பேர்கள் உட்காரக் கூடிய சிறிய ரகம். எட்டாயிரம் ரூபாய் அடக்கத்தில் ஒரு நடுவாந்திர ரகம். பன்னிரண்டாயிரம் ரூபாய் வரம்பில் ஒரு பெரிய மாடல். எல்லாமே காலனுக்கு நாற்பது மைல் வரை கொடுக்கும்படியான ஏற்பாடு."

"கேட்பதற்கு மிகவும் இனிமையாக இருக்கிறது-ஆனால் நடைமுறையில் அது சாத்தியமாகுமா? சமீபத்திய ரூபாய் மதிப்புக் குறைவு உங்கள் நம்பிக்கையைப் பாதிக்கவில்லையா?"

"நல்ல கேள்வி! ஆனால் என் திட்டத்துக்கும் அன்னியச் செலாவணிக்கும் சம்பந்தமே இல்லை. ஆகையால் ரூபாய் மதிப்புக் குறைவைப் பற்றிப் பயப்பட வேண்டியதில்லை. ஒவ்வொரு பாகமும் நம் நாட்டிலேயே நம் தொழிலாளிகளைக்கொண்டு தயார் செய்யப்பட வேண்டும். தயாரிக்க முடியும். இதில்தான் அடக்கவிலைக் குறைப்பு இருக்கிறது."

"உங்கள் திட்டத்தைப் பற்றிக் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்களேன்."

"சுமார் முந்நூறு ஏக்கரா நிலப் பரப்பு என் திட்டத்திலிருக்கும் தொழிற்சாலைக்குத் தேவை. முதலில் அங்கு நூற்றுக்கணக்கான தொழில் நுட்ப உழைப்பாளர்களுக்கு ஜாகை வசதி செய்து கொடுக்க வேண்டும். ஒவ்வொரு தொழிலாளிக் குடும்பமும் மோட்டார்க் காருக்குத் தேவையான பல பாகங்களில் ஒன்றை உருவாக்கும் பணியில் ஈடுபடும். அவர்களுக்குத் தேவையான மூலப் பொருளை மாத்திரம் நிர்வாகம் கொடுக்கும். மூலப் பொருளைத் தேவையான இயந்திர பாகங்களாக மாற்றிக் கொடுப்பதற்கு அவர்களுக்கு ஊதியம் வழங்கப்படும்.

"அப்படித் தயாரிக்கும் பொருள்களை அங்கேயேஉள்ள தொழிற்சாலையில் ஒன்றாகஇணைப்பார்கள். இந்தத் திட்டத்தின் மூலம் ஆண்டு ஒன்றுக்கு ஐம்பதினாயிரத்திலிருந்து அறுபதினாயிரம் கார்கள் வரை உற்பத்தி செய்யலாம். எந்தச் சிறு தொழிலாக இருந்தாலும் சரி, பெரிய தொழிலாக இருந்தாலும் சரி, ஜப்பானிலும், சுவிட்சர்லாந்திலும் இந்த மாதிரி தொழிலாளர்களைப் பயன்படுத்தி வெற்றி காணுகிறார்கள். நாமும் இதைத் தாராளமாகப் பின்பற்றலாம்."

"தொழிற்சாலைக்கான ஆரம்பகால உதவிக்கும் மூலதனத்துக்கும் சர்க்காரை அணுகுவீர்களா?"

"அப்படி உத்தேசமில்லை! அது நடைமுறையில் பல சிக்கல்களைத்தான் தோற்று



## பண மொழிகள்

சிறு சேமிப்பையும் சிக்கனத்தையும் பற்றிய பேச்சு வெகுவாக அடிபடுகையில் அவற்றைப் பற்றிச் சில பெரியோர்கள் கூறியதை யெல்லாம் நினைவுகூர விரும்புகிறேன்:

1. செல்வத்துடன் வாழ்ந்த பின் ஏழையாவதைக் காட்டிலும், ஏழைமைக்குப் பின் வரும் செல்வ நிலையே சாலச் சிறந்தது. -ஜான் ரே

2. பணமற்றவன் அம்பில்லாத வில்லுக் கொப்பாவான். -தாமஸ் ஃபுல்லர்

3. செல்வத்தைத் தேடுவது ஒரு கலை என்றால் தேடிய செல்வத்தைக் காப்பாற்றிக் கொள்வது அதைவிடப் பெரிய கலையாகும். -டிஸ்ரேலி.

4. பணம் தேடுவது முட்டாளுக்குக் கூடத் தெரியும். ஆனால் அதைச் செலவு செய்ய அறிஞர் களுக்குத்தான் தெரியும். -கதே

5. சிக்கனமாக இரு; ஆனால் பேராசைப்படாதே. -ஜார்ஜ் ஹெர்பர்ட்.

6. செல்வத்தைத் தீய வழியில் தேடுவது குற்றமாகும். ஆனால், தீய வழியில் செலவிடு வதோ அதைவிடப் பெருங் குற்றமாகும். -ரஸ்கின்

7. வருவாய்க்கு மீறிச் செலவு செய்பவன் பணக்காரனும் அல்ல; செலவுக்கு அதிகமாக வருமானமுள்ளவன் ஏழையுமல்ல. -ஹலி பர்டன்

8. சிக்கன வாழ்வே சிறிய கலையாகும். சிக்கனத் தில் விருப்பமே ஒழுக்கத்தின் அடிப்படை.
- பெர்னார்ட் ஷா

9. பணத்தைச் செலவு செய்வதுடன் சேமிப்ப திலும் ஈடுபடும் மனிதன் இரு வகையில் நன்மை அடைவதால் மிகுந்த இன்பமடைகிறான்.
-ஸாமுவேல் ஜான்ஸன்.

10.

| | | ப. | ஷி. | பெ. |
|---|---|---|---|---|
| வருமானம் | - | 20 | 0 | 0 |
| செலவு | - | 19 | 19 | 6 |
| விளைவு | - | இன்பம் | | |
| வருமானம் | - | 20 | 0 | 0 |
| செலவு | - | 20 | 0 | 6 |
| விளைவு | - | துன்பம் | | |

- டிக்கன்ஸ்

தொகுப்பு: பு. வைத்தியராமன்

---

விக்கும். தொழில் முன்னேற்றத்தில் தாமத மும் ஏற்படும். ஆகையால் நான் தனிப்பட்ட ஆர்வமுள்ள நபர்களைச் சேர்த்து ஒரு கூட்டுறவு ஸ்தாபனமாக ஆரம்பிக்கவே விரும்புவேன். அப்படிப் பங்கு பெறுபவர் களுக்குத்தான் முதலில் மலிவு ரக மோட் டார் கிடைக்கும். பிறகுதான் வெளி வியாபாரம். இந்த முறையில் பணம் போட்ட வர்களுக்கு, உற்பத்திப் பெருக்கத்தில் ஆர்வம் இருக்கும். நாளடைவில் இப்போது ஸ்கூட் டர்கள் ஓடுவதுபோல் கார்கள் ஓட வாய்ப்பு உண்டு.''

''மலிவு விலையில் மோட்டார்க் கார்கள் கிடைத்தால் அதைக் கிராமவாசிகளும் மேலை நாடுகள் போல வாங்க விரும்புவார்கள். ஆனால் நம்முடைய கிராமாந்திரப் பாதைகள் கார் போக்குவரத் திற்கு அவ்வளவு அனுசரணையாக இருக்காதே!''

''இந்த விஷயத்தை மனத்தில் கொண்டு தான் வீல் பேசை (wheel base) ஒன்பதரை அங்குலம், பத்தரை அங்குலமாக உயர்த்த விரும்புகிறேன். எந்தவிதமான பாதையிலும் அப்போதுதான் கார்கள் இடைஞ்சலில் லாமல் போகும்!''

''நீங்கள் சிருஷ்டித்திருக்கும் இந்த 'அரவிந்த்' மோட்டார் நீங்கள் குறிப்பிட்ட நடுவாந்திரக் காரின் அடக்க விலையான எட்டாயிரம் ரூபாய் ஆயிற்றா? மேலே ஆயிற்றா?''

''இது நான் மாதிரிக்காகத் தயாரித்துப் பரீட்சை பார்த்தது. இதில் உள்ள சில பாகங்களை நான், வெவ்வேறு இடங்களி லிருந்து வாங்கிச் சேர்த்தேன். பதினொரு குதிரைச் சக்தி வாய்ந்தது. இதன் அடக்கம் ஒன்பதாயிரத்து அறுநூறு ரூபாய். பாகங் களை நாமே தயாரித்துப் பொருத்தும்போது அடக்கம் எட்டாயிரத்தில் நிற்கும்.''

''இந்த மாதிரி 'அரவிந்'தை சிருஷ்டிக்க உங்களை எந்தச் சூழ்நிலை தூண்டியது?''

''இதற்காகத் திருவனந்தபுரம் மகாராஜா வுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். அவருடைய விலை உயர்ந்த பழைய பாணிக் காரை நவீனமாக்கும் பணியை நான் ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டு வெற்றியுடன் செய்து முடித்தேன். அந்த முயற்சியில் ஈடுபட்ட போதுதான், நாமே எல்லா வசதி களையும் கொண்ட ஒரு சிறிய காரைத் தயார் பண்ணிப் பார்க்கலாமே என்று நினைத்தேன். 'அரவிந்த்' தோன்றியது. எனக்கு அநுபவ பூர்வமான ஒரு கார் உற்பத்தித் திட்டமும் கிடைத்தது.''

''சர்க்காரிடம் உங்கள் திட்டத்திற்குப் பண உதவி கேட்கப் போவதில்லை என்று சொன்னீர்கள். வேறு ஏதும் சலுகை கேட்பீர்களா?''

''தேவையான மூலப் பொருள்களை, அதாவது உலோகத் தகடுகளை நியாயமான விலைக்குத் தடங்கலில்லாமல் கிடைக்க ஏற் பாடு செய்யும்படி வேண்டிக் கொள்ளலாம்.''

''பிரதான இயந்திரங்களை யெல்லாம்கூடக் குடிசைத் தொழில் பாணியில் உற்பத்தி செய்துவிடலாம் என்று நம்புகிறீர்களா?''

''நிச்சயமாக! இதை ஒட்டி ஓர் ஆராய்ச் சிக்கூடமே தோன்ற வாய்ப்பு இருக்கிறது! சென்னை நகரத்தில் உள்ள மோட்டார்க் கார் பொறியியல் நிபுணர்களின் சங்கம் இந்தத் துறையில் ஆக்கம் தரும் யோசனை களைக் கொடுக்குமே!''

''உங்களுடைய உத்தேசத் தொழிற்சாலை கேரளாவில் தான் தோன்றுமோ?''

''அப்படி நான் சொல்லவில்லை. பாரதத் தில் எங்கு நான் எதிர்பார்க்கும் வாய்ப்புகள் கிடைக்கின்றனவோ அங்கு அது தோன்ற லாம்.''

✲

அவருடைய 'அரவிந்'த் எத்தனை மிருதுவாகவும் இதமாகவும் சாலைகளில் ஓடுகிறதோ, அப்படித்தான் அவருடைய சம்பாஷணையும் திட்டமும் இதமாக இருக்கின்றன. அவருடைய கார்க் கதவுகளை எத்தனை சுலபமாக, சிரமமில்லாமல் நவீனமாகத் திறந்து கொண்டு வெளிவர முடிகிறதோ, அத்தனை சுலப மாக அவர் மனக்கதவும் திறக்கின்றது.

திறமையுள்ள எந்த ஒரு மனிதரின் தொழிலபி விருத்தித் திட்டமும் அலட்சியப் படுத்தப்படாமல் தொழிலார்வம் கொண்டவர்களின் கவனத்துக்கும் பரிசீலனைக்கும் உட்படவேண்டியது அவசியம்தானே.



# இந்த நேர்த்திமிகுந்த டெலிராட் மாடல்களில் ஒன்றை

லேமென்ட்டா ஹை-பி, ஏஸி, 5 ஸ்பீக்கர்கள், 8 வால்வுகள், அதிநுட்பமான 5 அலைவரிசைகள், 5 பட்டன் டோன் வில்டர்கள் சக்கலைகள் உட்பட விலை ரூ. 868.33 (வரிகள் பிரத்யேகம்)



## தேர்ந்தெடுப்பதற்கு இதோ 6 முக்கிய காரணங்கள்

• 1. விரிவான ஆராய்ச்சி மற்றும் தரக் கட்டுப்பாடு • 2. ஒவ்வொரு உறுப்பும் அநேக சோதனைகளுக்கு உள்ளாக்கப்படுகிறது • 3. டெலிராட் இந்தியாவில் ஹை-பிடெலிடி ரேடியோ தயாரிப்பில் முதல்வர்கள் • 4. மரக் கேபினெட்டுகள் தொனியை அதிகத் தெளிவுடனும் சிறப்பாகவும் கேட்கச் செய்கின்றன • 5. மோஸ்தர் அழகு மற்றும் ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்ற விலைகள் • 6. உத்தரவாதத்துடன் இலவசமாக செப்பனிடும் சேவை இந்தியா முழுவதிலும் 700 டெலிராட் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

### ரேடியோக்கள்



காமெட் ஏஸி, 3 சூப்பர் - சென்சிடிவ் ஆல் வேவ் பேண்டுகள், 6 வால்வுகள், பியானோ-கீ, விலை ரூ. 375/- சக்கலைகள் உட்பட (வரிகள் பிரத்யேகம்)



காப்ரைஸ் ஏஸி, ஏஸி/டிஸி, ஆல்வேவ், 6 வால்வுகள், 3 அலைவரிசைகளுடன் மாத்திரமாக தொனிக்கட்டுப்பாடு. விலை ரூ. 328. (வரிகள் பிரத்யேகம்).



D 2642 ஏஸி, ஆல்வேவ், 4 அலைவரிசைகள், 6 வால்வுகள், பியானோ-கீ, மாத்திரைகளும் பேஸ்/இணைந்த கட்டுப்பாடு விலை ரூ. 415/- சக்கலைகள் உட்பட (வரிகள் பிரத்யேகம்).

### டிரான்ஸிஸ்டர்கள்



TR 831 P-போர்ட்டபிள், 8 டிரான்ஸிஸ்டர்கள், 2 டயோடுகள், 3 அதிநுட்பமான அலைவரிசைகள். விலை ரூ. 415. சக்கலைகள் உட்பட (வரிகள் பிரத்யேகம்).



T 1146 மேஜை மாடல், 9 டிரான்ஸிஸ்டர்கள், 2 டயோடுகள், 4 அதிநுட்பமான ஆல்-வேவ் அலைவரிசைகள். விலை ரூ. 415. சக்கலைகள் உட்பட (வரிகள் பிரத்யேகம்).



ஈலேட் போர்ட்டபிள், 8 டிரான்ஸிஸ்டர்கள், 2 டயோடுகள், 3 அலைவரிசைகள், 4 ... விலை ரூ. 395/- சக்கலைகள் உட்பட (வரிகள் பிரத்யேகம்).

மகோன்னதமான தொனிச் சிறப்புக்கு
டெலிராடுக்கு இணை வேறெதுவுமில்லை




விநியோகஸ்தர்கள் (தென் பிராந்தியம்)
மெஸர்ஸ் அஸோஸியேட்டட் ரேடியோ & எலெக்ட்ரிகல்ஸ்
31, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, சென்னை-2.





## ஆபத்துக்கு உதவும் விடுதி

அமெரிக்காவில் "ஆபத்துக்கு உதவும் விடுதி" என்பதாக ஒரு நிறுவனம். இதன் பணி என்ன என்பதை இதன் பெயரே விளக்கும்.

இங்கு ஒரு நாள் இரவு டெலிபோன் வந்தது. "நான் ஒரு பாட்டில் தூக்க மாத்திரைகளை விழுங்கி விட்டேன்; சாகவே விரும்புகிறேன். ஆனால் சாகு முன் யாரிடமாவது சில வார்த்தைகள் பேச வேண்டும் என்று ஓர் ஏக்கம். அதற்காக போன் செய்தேன்" என்றது ஒரு பெண் குரல்.

டெலிபோனை எடுத்து இதைக் கேட்ட ஆலன் என்பவனுக்கு வியர்த்து விட்டது. எப்படியாவது அவளைக் காப்பாற்ற விரும்பினான். பேச்சை முடித்து விட நினைத்தாள் அவள். அதற்கு இடம் கொடாமல் இவன் இதமாகப் பேசினான். அதே நேரத்தில் இந்த டெலிபோன் எங்கிருந்து வந்திருக்கிறது என்று கண்டு பிடிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். டெலிபோன் இலாக்காவினரும் போலீஸாரும் பரபரப்புடன் இயங்கினர். அவர்களுக்கு இருந்தது அரைமணி நேரம் தான். அதற்குப் பின் அவள் உயிர் நீடிக்காது. அதற்கு முன் அவள் டெலிபோனை வைத்து விட்டாலும் அவள் எங்கிருந்து பேசினாள் என்பதைக் கண்டு பிடிக்க முடியாது, டெலிபோன் இலாக்காவினரால். இக்கட்டான இந்நிலையில் மரணத் தருவாயில் இருந்த அந்தப் பெண்ணைப் பேச வைத்தான் ஆலன். அவள் தன் கதையைக் கூறி வரச் செய்தான். கடைசியில் அவளைக் காப்பாற்றும் முயற்சியில் வெற்றியும் பெற்றான்.

இது உண்மைக்கதை. லைஃப் பத்திரிகையில் முதலில் வெளியாயிற்று. இதை ஆதாரமாகக் கொண்டு எடுக்கப்பட்ட அற்புதமான ஆங்கிலப் படம் (The slender thread) சென்னைக்கு வந்தது. வந்த சுவடு தெரியாமல் ஓடிப் போயும் விட்டது!

படம் ஓடாததால் அதன் தரம் குறைந்து விடுமா, என்ன?



## அணுகுண்டுக்கு மருந்து!

முதலாவது அணுகுண்டின் சிருஷ்டியை மேற்பார்வையிட்டு வந்த டாக்டர் ராபர்ட் ஆப்பன்ஹீமர் அமெரிக்க காங்கிரஸ் கமிட்டி முன் ஆஜராகி அது குறித்த விவரங்களை விளக்கிக் கொண்டிருந்தார். ஜனங்களும் பெருங் கூட்டமாகக் கூடியிருந்தனர்.

அப்போது, 'இந்தக் கருவியிலிருந்து தப்பித்துக் கொள்ள ரட்சையாக ஏதாவது இருக்கிறதா?' என்ற கேள்வி இவரிடம் கேட்கப்பட்டது.

"நிச்சயமாக இருக்கிறது" என்றார் அணு விஞ்ஞானி.

"அது என்ன?"

அணு விஞ்ஞானி ஒரே நிசப்தமாய் ஆவலுடன் தம்மையே பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தை நோக்கினார். தமக்கு முன் இருந்த ஒலிபெருக்கியில், 'அதுதான் சமாதானம்' என்று மெல்லக் கூறிவிட்டு அருகில் இருந்த ஆசனத்தில் அமர்ந்து விட்டார்.

—பாலன்

## அச்சச்சோ ...... சோ!

அந்தப் பையன் ரொம்பவும் சுட்டிகை, சுறுசுறுப்பு. ஆனால் ஒன்று, சிறு வயதில் அவன் எதற்கெடுத்தாலும் "அச்சச்சோ, அச்சச்சோ" என்பான். இதுவே பெயராக நிலைத்துவிட்டது! நிலைத்ததுமட்டுமல்ல...நல்ல ராசிப் பெயராகவும் ஆகிவிட்டது. இந்தப் பையன்தான் தற்போது சினிமாவிலும், நாடகத்திலும் பிரபலமடைந்துவரும் நல்லதொரு நடிகர்! ஊகிக்க முடிகிறதல்லவா? வேறு யாருமல்ல; திரு "சோ" அவர்கள்தான்.

— அரவிந்தா



## வருத்தம் ஏன்?



வின்ஸ்டன் சர்ச்சிலுக்குத் தமக்கு வயதாகி விட்டது என்று சொல்லிக் கொள்ளவே பிடிக்காது. பிறர் அப்படிச் சொல்வதையும் விரும்ப மாட்டார். ஒருமுறை அவர் தம் நண்பரைப் பார்க்கப் போனபோது முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போனார்.

''ஏன்? என்ன விஷயம்?'' என்றார் நண்பர்.

''எனக்கு வயதாகி விட்டது.''

''எப்படித் தெரியும்?''

''இன்று காலையில் நான் உலாவப் போனபோது, ஓர் அழகான இளம் பெண் என்னிடம் வந்து கூச்சமில்லாமல் மணி என்ன என்று கேட்டு விட்டாள்'' என்று பதில் அளித்தார் சர்ச்சில்!

- எஸ். எல். எஸ்.

## பலன் என்ன?




அமெரிக்காவில் உள்ள பெரிய தொழிற்சாலைகளைப் பார்த்து விட்டுத் திரும்பிய ஓர் ஆங்கிலேயர், தம்முடைய தொழிற்சாலையிலும், ''ஒன்றையும் ஒத்திப் போடாமல் இன்றே முடித்து விடுங்கள்'' என்ற வாசகம் எழுதப்பெற்ற பலகைகளை எல்லா இடங்களிலும் தொங்க விட்டார். ஒரு மாதம் கழித்து, ஒரு நண்பர் அந்த அறிவிப்புகளின் பலன்களைக் கேட்ட போது அந்த ஆங்கிலேய கனவான் சொன்ன பதில்: ''அந்த அறிவிப்புகளால் நிறைய பலன் ஏற்பட்டிருக்கிறது. என்னுடைய ஆபீஸ் பையன் கடற்படையில் சேர்ந்து விட்டான். இரண்டு டைப்பிஸ்டுகள் சம்பள உயர்வு கேட்டுச் சதா நச்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக எப்போதும் பயமுறுத்துகிறார்கள். காஷியர் 1000 பவுனைத் தூக்கிக் கொண்டு தலைமறைவாகி விட்டார். தலைமைக் குமாஸ்தா என்னுடைய காதலியோடு மறைந்து விட்டார்.....! இன்னும் என்ன பலன் வேண்டும்......''

—விஜய்

ஆதாரம்: சுழநாடு

அமெரிக்காவில் நியூயார்க்கிலிருந்து வெளிவரும் ஒரு பத்திரிகையில் இப்படி ஒரு விளம்பரம் வந்ததாம்:

''தேவை. முப்பத்தெட்டு வயதான ஒரு விவசாயியை மணக்க ஒரு பெண் தேவை. வயது முப்பது இருக்கலாம். ஆனால் இயந்திரக் கலப்பை ஒன்று வைத்திருக்க வேண்டும். உடனே அனுப்பவும்: கலப்பையின் புகைப்படமும் மற்ற விவரங்களும்!''



- சீனிவாசன்



பிரின்ஸ்போல் மனைவி: என்ன இது? யார் வந்து கதவிடித்தாலும் ஓடி ஓடி ஒளிஞ்சிண்டு......! அட்மிஷன் 'வீனஸ்' வந்து விட்டதுன்னு நான் வெளியே போயிட்டு வந்தால் கூட ஒளிஞ்சுக்க ஆரம்பித்து விடுகிறீர்களே!

## கண்டுபிடியுங்கள்!



1. உச்சிக் கொம்பன்
2. கருமறையான்
3. சட்டித்தலையன்
4. கருடமுகவன்
5. சிட்டுக்கொம்பன்
6. குட்டைச்செவியன்
7. பகக்காத்தான்
8. குத்துக் குளம்பறுத்தகண்ணன்
9. அடுத்தனிடுபிடுங்கி செம்மறை









ஒன்பது பெயர்களிலும் ஓர் ஒற்றுமை உண்டு. யாரை அல்லது எதை இவை குறிக்கின்றன? தெரிகிறதா?

-- வையாபுரிப் பள்ளு

விடை: அவை பல ரக மாடுகளின் பெயர்கள்

நல்வரவு! 56,026 மக்களோடு
சேர்ந்துகொள்ள உங்களை
அழைக்கிறோம்.

பாரதமெங்கும் 182 இடங்களிலுள்ள

# பஞ்சாப் நேஷனல் பாங்க்

56,026 பாதுகாப்பு லாக்கர்களிலே, புத்திசாலிகள் பலர் தங்கள் நிதிகளை—அணிகலன்கள், நகைகள், தஸ்தாவேஜுகள்—யாவற்றையும் பத்திரமான பாதுகாப்பில் வைத்துக்கொண்டுள்ளனர். கள்ளர்கள் அணுகவோ, தீயினும் பாதிக்கப்படவோ முடியாத வலுவான லாக்கர்கள் அவை. இத்தகைய பாதுகாப்பு லாக்கர்களிலே உங்கள் நிதிகளை வைத்துக்கொள்ளுங்கள்.







# பஞ்சாப் நேஷனல் பாங்க்

# தட்டுங்கள் திறக்கப்படும்!

சினிமா

மீனுட்சி, கணவனுல் கைவிடப்பட்டவள். (காரணம் தெரியாது!) கணவன் கட்டழகி கிளாவின் மையலில் சிக்கி (எப்படி என்று கேட்கப்படாது) அவள் பணத்திளுல் 'பார்' என்று சொல்லப்படும் மேல்நாட்டுப் பானக் கடை நடத்துகிருன் படாடோபமாக. (அப்போதுதானே வலிப்பு நடனங்களையும் காட்டுமிராண்டிக் கூத்துகளையும் திரையில் காட்டலாம்.) அவனிடம் சிறு வயது முதலே அடைக்கலம் என்ற ஊமை, பணியாளாக இருக்கிருன். எஜமானனை முதுகில் தட்டுமளவுக்கு உரிமையும் அவர் அன்பையும் பெற்றவன் பீத்தலான ஒரே சட்டையுடன் உலவுவது ஏன் என்று குழப்பிக் கொள்ளக் கூடாது. டைரக்டர் சந்திரபாபுவுக்குப் பிடித்தமான உடை அதுதான். மீனுட்சிக்கும் அவள் குழந்தைக்கும் அடைக்கலம் அடைக்கலமளிக்கிருன். தன் எஜமானர்தான் அவள் கணவர் என்பதை அறிந்து அவரிடம் மன்ருடும் கட்டத்தில் ஒரு கொலை நடக்கிறது. (கதைக் கொலைதான்) இதிலிருந்து படம் மர்மப் படத்தின் பாதையில் சென்று, மற்ருெரு கொலையையும் செய்துவிட்டு ஒரு திருசாக ஜனகணமன கட்டத்துக்கு வருகிறது. படம் பார்த்துவிட்டு வெளியே வரும் போது நாமும் அடைக்கலத்தைப் போல் ஊமையாகி விடுகிருேம். படம் எப்படி என்று கேட்பவர்களுக்கு என்ன பதில் கூறுவது என்று புரியாமல் மௌனம் சாதிக்கிருேம். பாத்திரப் படைப்பில் பலமில்லாவிட்டாலும் விஜயாவின் கவர்ச்சி நடனங்களுக்குக் கதை வளைந்து கொடுக்கிறது. சந்திரபாபுவும், சாவித்திரியும், மனேகரும் தாங்கள் சிறந்த நடிகர்கள் என்பதைப் பல இடங்களில் நமக்கு நினைவுபடுத்துகிருர்கள். காமிராவின் திறமையை ஒருசில இடங்களில் காண முடிகிறது. நாலு பாடல்களில் எதுவும் இதயத்தில் நிற்கவில்லை.

எஜமானனைக் கொலை செய்துவிட்டான் என்பதற்காக ஹோட்டல் சர்வர்கள் அடைக்கலத்தை அப்படியா போட்டுப் புரட்ட வேண்டும்? இது படத்தில் சண்டைக் காட்சியை நீளப்படுத்தவா? அந்த இடத்தில் சந்திரபாபுவின் நடிப்பு நன்ருக உள்ளது.

கர்த்தரின் காலடியில் பாபு கதறும் கட்டம் பிரமாதம். சந்திரபாபுவின் படத்தில் புதுமையையும் புரட்சியையும் எதிர்பார்த்தோம். ஏமாற்றி விட்டார்.








"...இதோ இருக்கிறது!"

## குளுமையான, நறுமணம் கமழும் இன்பமளிக்கும், எகானமி டால்க்

இது பரவசமூட்டும் நறுமணம் கொண்ட மிக சிறந்த டால்க்...அதிசயிக்கத்தக்க சிக்கனம் வாய்ந்தது! உங்களை நாள் முழுவதும் அற்புதமான குளுமையுடனும், நறுமணத்துடனும், பரவசமூட்டும் புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது. குழந்தை உள்பட, குடும்பத்தினர் அனைவருக்கும் சிறந்தது.

## கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்

CAPT. C. 3 TAM

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ: 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

## SHRI RAMTIRTH YOGASHRAM

DADAR, BOMBAY-14

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3
போன்: 34258

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன



# யமன்களும்

சென்னையில் அநேகம் பேருக்குத் தெரியாது.....
ஃ கரசைவாக்கம் நெடுஞ்சாலையில் பெல்லிஸ் பஸ் டர்மினஸுக்கு அருகில், ஸர் தர்மராஜன் கல்லூரி ஹாஸ்டல் இருப்பது. அதிலும் அதில் உள்ள யமன்கள் பிரிவு பற்றித் தெரியவே தெரியாது.

எல்லாப் பிரிவுகளிலும் அமைதி கோலோச்ச 'யமன் பிரிவு' என வழங்கப்பெறும் 'எம். நாகசாமி' பிரிவிலே மட்டும் சலசலப்பு இருந்தது. காரணம் அங்கே சதியாலோசனை நடந்து கொண்டிருந்தது. சதியாலோசனைக்குக் காரணம்...... யமன் பிரிவுக்கு அந்தப் பெயர் வாங்கித் தந்தவர்களான, நான்கு அறைகளில் வாசம் செய்யும் பதினறு மாணவ ரத்தினங்களின் ஏமாற்றம். ஏமாற்றத்துக்குக் காரணம்..... வார்டனை திருவேடியப்பன் ஒரே ஒரு மாணவனுக்கு மேலே இரவு காட்சி சினிமாவுக்குப் போக அனுமதி தர மறுத்து விட்டது.

சினிமாவுக்குப் போய்விட்ட சேது போக மீதி பதினேந்து பேரும் சேர்ந்து, திருவேடியப்பனின் பெரிய முகத்தில் எப்படிக் கரியைப் பூசுவது என்று ஆராய்ந்து கொண்டிருந்தார்கள்.

புத்தம் புதியதாகக் குடியேறிய வாலிபம் மெருகு பூசிய இடமான உடற்கட்டு. கவலையே தெரியாத தன்மையைக் காட்டும் குழந்தைத்தனம் தெரியும் கண்கள்... எப்போதும் சேர்ந்தாற்போல் துறுதுறுவென்றிருக்கும் சுபாவம்....

மற்றப் பிரிவு மாணவர்களுக்கும், தள்ளிச் சற்றுத் தொலைவிலிருக்கும் ஸ்ரீமதி தர்மராஜன் பெண்கள் கல்லூரி மாணவி விடுதிப் பெண்களுக்கும் இவர்களைக் கண்டாலே சிம்ம சொப்பனம். 'மெஸ்'ஸில் இன்று என்ன கறி' என்பது முதல், 'ஹாஸ்டல் டே'க்கு எந்த மந்திரியை அழைப்பது என்பது வரையில் அனைத்திலும் அவர்களுக்குத் தனி அதிகாரம் உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வொரு யமன்.

''அதனால்தான் நான் என்ன சொல்லுகிறேனென்றால்.....''

சொல்ல வந்ததை நிறுத்தி ஜன்னலைத் திரும்பிப் பார்த்தான் சுரேஷ்குமார். அவனைத் தொடர்ந்து அத்தனை பேரின் தலைகளும் ஜன்னல் பக்கம் திரும்பின.

அரை நிமிட மௌனத்துக்குப் பிறகு திரும்பி, ''நான் என்ன சொல்லுகிறேனென்றால்.....'' என்றவன் மீண்டும் திரும்பிப் பார்த்தான். ''என்ன இழவு இது?'' என்றான்.

''என்ன இழவு இது?'' மற்றவர்களும் சொன்னார்கள். ''டேய், இவனே! எதற்காக அப்படிப் பேயைப் பார்க்கிற மாதிரி விழிக்கிறாயாம்?''

''யாரோ விசிலடித்தாற்போலில்லை?'' என்ற சுரேஷ்குமார் மற்றவர்கள் பின் தொடர ஜன்னல்வழியே சற்றுத் தள்ளியிருக்கும் மதில்சுவரை உற்றுப் பார்த்தான். மீண்டும் விசில் சத்தம் வரவே தெரிந்துகொண்டார்கள். ''யாரோ நம்ம குரூப். வெளியே போய் மாட்டிக்கொண்டிருக்கிறான். அவன் விடுகிற 'வொயர்லெஸ் சிக்னல்'தான் இது. யாரா யிருக்கும்?'' என்ற சுரேஷ்குமார் சுற்றிலு முள்ளவர்களை ஒரு நோட்டம் விட்டான்.

சினிமாவுக்குப் போய்விட்ட சேதுவைத் தவிர மற்றவர்களெல்லாம் இருந்தார்கள். 'அப்படியானால் சேதுவா ? சினிமாவுக்குப் போகல்லையா அவன்? போகாவிட்டாலும் நேரே உள்ளே வருவதற்கென்ன? இதென்ன ரகசியத் தகவல்?' தன்னைப் பின்தொடர முயலுபவர்களைச் சின்னஞ்சிறு சீறலுடன் நிறுத்திவிட்டு, அவன் மட்டும்

மதிலோரமாகப் போய், ''யார்ரா அவன்?'' என்று கேட்டான் மெதுவாக.

மதிலுக்குப் பின்னுலிருந்து விலுக்கென்று நிமிர்ந்தது சேதுவின் தலே. ''இங்கே யாருமில்லேயே ?'' என்ருன் பரபரப்புடன்.

''நம்ம குருப்பைத் தவிர வேறு யாருமில்லே.'' சுரேஷ் கேட்டான்: ''ஏண்டா, கேட் வழியே வருவதற்கென்ன?''

''வேறு யாருமில்லேயே ?'' என்று சேது மீண்டும் கேட்கவே எரிச்சல் வந்து விட்டது சுரேஷ்குமாருக்கு. ''தோட்டத்தில் தேடிப் பார்த்தால் ஒன்றிரண்டு தேளும் பாம்புங்கூட இருக்கலாம். ஏண்டா?''

''ஸ்ஸ்ஸ்'' உதட்டில் விரலே அழுத்திஞன் சேது. ''சரி, நான் தரேன். நீ வாங்கிக்க....'' என்றவன் குனிந்தான். அவன் மறுபடியும் நிமிர்ந்த போது....

மூச்சே நின்றுவிடும் போலாகி விட்டது சுரேஷ் குமாருக்கு.



"**பா**ல் சாப்பிடுகிறாயாடி?"

பாமா கேட்ட கேள்வி, ஜன்னல் வழியே சற்றுத் தொலைவில் தெரிகிற ஆண்கள் ஹாஸ்டலையே சங்கடத்துடன் பார்த்துக் கொண்டிருந்த மைதிலியின் காதைக் குடைந்து யாரோ முதுகில் அறைந்து விட்டாற்போல் உறைத்தது. சட்டென்று திரும்பினாள். "எ...என்ன கேட்டாய்?" என்று குழறினாள்.

"பால் சாப்பிடறயா? என்றேன்....."

கிளாஸ் நிரம்ப இருந்த ஆடை கட்டிப் போன பாலை வாங்கி, கடகடவென்று பாதியைக் குடித்துவிட்டு, "மணி என்ன?" என்று கேட்டபடியே கையைத் திருப்பினாள் மைதிலி. அவள் கஷ்ட காலம், கடிகாரமும், பால் கிளாஸும் ஒரே கையில் இருந்தன. மணி பார்க்கும் முயற்சியில் பால் கொட்டிப் போக.... பாமாவின் புடவையில் சிதற.... அவள் அலற.... மற்றவர்கள் தேற்ற....

அமளி... ஒரே அமளி.

"ஏண்டி....." தூங்கிக் கொண்டிருந்த ஹெலன் தாமஸ் எழுந்து அதட்டினாள். "ஏண்டி, இவள்களே! தூங்குகிறவள் மனுஷியாகத் தெரியவில்லையா? என்னடி அங்கே பெரிசா கலாட்டா?"

அழுகையும் புலம்பலுமாகப் பாமா விளக்கச் சீறினாள் அனிலா. "என்னடி வந்தது. உனக்குக் கேடு? ஏன் அப்படி விழிக்கிறே?"

"ஒன்றுமில்லையடி. அந்தச் சேதுவை நினைத்துக் கொண்டேன். பாவமாயிருந்தது."

"ஏன்?, என்ன பாவம் செய்தான்?"

"எல்லாம் என்னால் வந்தது" என்று நெடுமூச்செறிந்த மைதிலி ஜன்னல் வழியாகத் தெரியும் ஆண்கள் ஹாஸ்டலைக் கவலையுடன் பார்த்தாள்.

"**எ**ல்லாம் அந்த மைதிலியால் வந்த வினை. வால் ரெட்டை வால்." பாண்ட்டையிலிருந்து கைக்குட்டையொன்றையெடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான் சேது. "மெஸ்ஸில் சாப்பிட்டுப் புறப்படும் போதே மணி ஒன்பதாகி விட்டதா.... அவசரம் அவசரமாய்ச் சைக்கிளை மிதித்துக் கொண்டு போனேனா, குளத்துப் பஸ் ஸ்டாண்டிலிருந்து இனிமையான குரல் ஒன்று 'மிஸ்டர்' என்று அழைத்தது. யாரோ யாரையோ கூப்பிடுகிறார்கள் என்று நினைத்து அலட்சியமாகத் திரும்பினேனா, அப்படியே திடுக்கிட்டுப் போனேன். யார் தெரியுமா?"

"இதிலென்ன ஸஸ்பென்ஸ்? மைதிலி!"

"ஒன்பது மணிக்குத் தவித்து நிற்கிறாளே, எனக்குப் பாவமாகப் போய் விட்டது."

"போகாதா, பின்னே?" சந்துரு கிண்டலாகச் சொன்னான். "காலேஜில்.... தோட்டத்தில் லெக்சர் ஹாலில் சுற்றிச் சுற்றி வந்தாய். அப்போதெல்லாம் நிமிர்ந்தும் பார்க்காத பரதேவதை அவள். இப்ப அவளாகக் கூப்பிடுகிறாளென்றால்....."

"அறைவேன் இப்போ." சீறினான் சேது. "சீரியஸ்னஸ் புரியாமல் உளறுதே! என்ன விஷயம்என்றேன். அவள்தான் விளக்கினாள்."

"விஷயத்தைச் சொல்லேண்டா!"

"ஜப்பான் மிதக்கும் கண்காட்சியைப் பார்க்க யாரோ டிக்கெட் தந்தார்களாம். ஹார்பருக்குப் போயிருக்கிறாள். நெரிசலில் இது அவளிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. உதற எவ்வளவோ முயற்சி பண்ணியிருக்கிறாள். முடியவில்லையாம்."

"ஒரு சந்தேகம்." சிகாமணி கேட்டான். "நல்லாத்தானே பேசுகிறது. வீட்டு விலாசம் கேட்டால் சொல்ல மாட்டானா?"

"கேட்டுத்தான் பாரேன்" என்று சேது கூற, குனிந்தான் சிகாமணி

மூன்று வயதுப் பையனொருவன் திருதிருவென்று விழித்தவாறு நின்றிருந்தான். சின்னப் பிஞ்சு உருவம். டெரிலின் அரை நிக்கரும் பூட்ஸும் பெரிய இடத்துக் குழந்தை யென்று பறைசாற்றியது.

"டேய், கண்ணா. சமர்த்துக் கண்ணா!" கொஞ்சினான் சிகாமணி. "நீ நல்ல பையனில்லை. உங்க வீடு எங்கே இருக்கு? கரெக்ட்டாகச் சொன்னால் சாக்லேட் தருவேன்" என்றான். அந்தக் குழந்தை, "அதோ" என்று தனது பிஞ்சு சுட்டு விரலை மூக்குக்கு மேலே தூக்கிப் பிடித்துக் கொண்டு, "அதோ, அங்கே!" என்று சுட்டிக் காட்ட, "டேய்! என்னமோ சொல்றதுடா!" என்று துள்ளினான் சிகாமணி.

"சும்மா இருடா!" அவன் துடிப்பை அடக்கினான் சேது. "ஹார்பரிலிருந்து இங்கேவரை எங்கே கேட்டாலும் அப்படித்தான் சொல்கிறான். போலீஸ் ஸ்டேஷனிலும்கூட....."

"போலீஸிலும் தகவல் தந்துவிட்டாயா?"

"பின்னே? ஊரார் சொத்தாயிற்றே. சொல்ல வேண்டாமா? கேளேன். அர்த்த ராத்திரிக்குப் பிறகு வீட்டைத் தேடிப் பிடிக்கிறது கஷ்டம், பேசாமல் போலீஸில் ரிப்போர்ட் பண்ணி விடலாம்னு சொல்லி, மைதிலியோடு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனேன்."

"ஒரு சந்தேகம்." சுரேஷ்குமார் கேட்டான். "அங்கேயே விட்டுவிட்டு வந்து விடுவதுதானே!"

"கஷ்ட காலம்தான்." அலுத்துக் கொண்டான் சேது. "பெரிய இடத்துப் பிள்ளையைப் போலீஸ் ஸ்டேஷனில் வைத்திருக்க முடியாது. உங்கள் வீட்டுக்குக் கொண்டு போய்க் காலையில் கொண்டு வாருங்கள். அதற்குள் கமிஷனர் ஆபீஸிலிருந்து ஏதாவது தகவல் வரலாம் என்று சொல்லி விட்டாங்க."

"ஒன்றும் நம்பர் அசடுடா நீ." அதட்டினான் சுரேஷ்குமார். "நான் இருப்பது ஹாஸ்டல். அங்கே கொண்டு போக வசதிப்படாது என்று சொல்லி அங்கேயே இவனை விட்டுத் தொலைப்பதுதானே?"

"அதுதானே சங்கடம்." கையைப் பிசைந்தான் சேது. "கூடயிருப்பவள் கல்லூரி மாணவியாயிற்றே! அவள் ஹாஸ்டலையும் சொல்லித் தொலைக்க வேண்டி வரும். ஒரு கல்லூரி மாணவியோடு பத்து மணி வரை ஊர் சுற்றுகிறேன் என்று தெரிந்தால் நம் ஹாஸ்டல் வேடியப்பனும், அவளுடைய வார்டன் ருத்ரம்மாவும் ரசிக்க மாட்டார்களே! அதனால்தான் என் அக்காவின் வீட்டு விலாசத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்து, அவ

பார்க்கப் பரவசமூட்டும் சித்திரம்!

## சித்ரா — பிரபாத் — சரஸ்வதியில்

ஜூன் 24உ முதல்

சென்னை மற்றும்
தென்னாடெங்கும்





வசனம்
உதயகுமார்
பாடல்கள்
குயிலன்
இசை
ராகவலு
டைரக்ஷன்
K.காமேஸ்வரராவ்
தயாரிப்பு
A.S.R.ஆஞ்சனேயலு



மாதவி புரொடக்ஷன்ஸ்
அளிக்கும்

# பாண்டவர் வனவாசம்

# சக்திக்கும், வலிமைக்கும்!







ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

## காட்பரீஸ் போர்ன்-விடா

ளுக்கும் டெலிபோனில் விஷயத்தை விஸ்தாரமாகச் சொல்லிவிட்டு இதையும் கையோடு அழைத்து வந்தேன்.''

''அக்கா வீட்டிலேயே கொண்டு போய் விடுவதுதானே.''

''விடலாம். ஆனால் அவள் வீடு அடையாறில்லவா? அவ்வளவு தூரம் போய் வர ரொம்ப நேரமாகி விடுமே! அது வரையில் மைதிலியை நடுத் தெருவிலா நிறுத்தி வைப்பது ?''

''ரொம்ப அக்கறைதான்.'' சந்துரு சிரித்தான். ''அவளிடமே இதைக் கொடுத்து அனுப்புவதுதானே?''

''டோண்ட் பி ஸில்லி.'' அசடு வழியச் சிரித்தான் சேது. ''கல்யாணமாகாத பெண் சட்டென்று குழந்தையோடு போனால் அது நல்லாயிருக்குமா? அதுவும் அந்த ருத்ரம்மா ஒரு தனிப் பிறவியாச்சே! ஏண்டா, ஒரே ஒரு ராத்திரிதானே ! சமாளிக்க முடியாதா?''

''வேடியப்பன் கண்ணில் படாமல் இருக்கணுமே! அதோடு அந்த 'அல்சேஷன்' மூக்கில் வியர்க்காமலும் இருக்கணும். இரண்டுமே ஆபத்துத்தான் !'' என்ற சுரேஷைத் தொடர்ந்து எல்லோரும் பையன் பக்கம் திரும்பினார்கள். திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தான் சிறுவன். எந்த நிமிஷமும் எந்தக் குறும்பும் செய்யத் தயார் என்று எழுதி ஒட்டியிருந்தது அவன் முகத்தில்.

''நேரமாகிறதடி !'' பாமா அதட்டினாள். ''விளக்கை அணைத்துத் தொலையேன்.''

பின்னங்கையைக் கட்டிக் கொண்டு நிம்மதியின்றி உலவிக் கொண்டிருந்த மைதிலி அலுப்புடன் விளக்கை அமர்த்திவிட்டுக் கட்டிலில் விழுந்தாள். ''என்ன மெட்ராஸோ! குழந்தை காணாமல் போனது கூடத் தெரியாத வகையிலா கப்பலே வேடிக்கை பார்ப்பார்கள். நல்ல வேளை சேது வந்தாரோ, நான் பிழைத்தேனோ? என்னடி, கேட்கிறாயா?'' என்றவள் அலுத்துக் கொண்டாள். ''தூங்குகிறாயா? அது சரி. ஏண்டி, நான் தவிக்கிறேனே!'' பாமாவை உசுப்பினாள். ''ஏய்! இவளே, எழுந்திரேன். சேதுவுக்குப் போன் பண்ணி நிலவரத்தைப் பற்றி விசாரித்தால் என்ன?''

''அர்த்தராத்திரியில் என்னடி கூத்தடிக்கிறாய்?'' சொக்கும் விழிகளுடன் போராடினாள் பாமா. ''வார்டனுக்குத் தெரிந்தால் கோபிப்பாள். தூங்கு பேசாமல்.''

''உனக்குப் பயமாயிருந்தால் நீ தூங்கு. நான் போய்ப் பண்ணுகிறேன் போன்'' என்று மைதிலி எழுந்து நடந்த பிறகு, விழித்தாள் பாமா திருதிருவென்று.

வார்டன் ருத்ரம்மாவின் அறை இருட்டில் மூழ்கிக் கிடந்தது. ஜன்னல் வழியே மங்கிய நிலவொளி அறையில் படர்ந்திருந்தது. ஒரு சுற்றுக் கவனித்தாள் மைதிலி. யாருமில்லை யென்று நிச்சயமாய்த் தெரிந்து கொண்டபின் அடிமேலடி வைத்து அறையில் நுழைந்து, டெலிபோனை எடுத்தவள், ''டெலிபோன் நெம்பர் தெரியவில்லையே!'' என்று கூறி விழித்தாள். பின்னாலிருந்து 'ஸிக்ஸ் ஒன் ஸிக்ஸ் எயிட்போர்' என்று குரல்




அவர் க்ஷவரம் செய்து கொள்ளும்போது க்ஷவர சோப்பை உபயோகிப்பதில்லை. குளிக்கும்போது உடம்பு தேய்த்துக்கொள்ள உபயோகிக்கும் சோப்பையே க்ஷவரம் செய்து கொள்வதற்கும் பயன்படுத்துகிறார். அதற்கான காரணத்தை அவரிடம் வினவினால், அம்மனிதரிடமிருந்து கிடைக்கும் விடை :

'இரண்டு வகையான சோப்புக்களை உபயோகிப்பது நம் வாழ்க்கையைச் சிக்கலாக்கி விடுகிறது.'

இவ்வாறு கூறியவர் வேறு யாருமல்ல. இவ்வுலகில் பன்னிரண்டு விஞ்ஞானிகளே புரிந்துகொண்டுள்ள சிக்கல் மிகுந்த 'தியரி ஆப் ரிலேடிவிடி' (Theory of relativity) யை வரையறுத்த ஆல்பர்ட் ஐன்ஸ்டீனே யாவார்.

ஆதாரம்: பெரிய மனிதர்களைப் பற்றிய உண்மைகள்

நகவல்: ஆர். வி. ராகவ்

---

வரவே, பூரிப்புடன், ''தாங்ஸ்'' என்று நம்பர் சுழற்ற முயன்றவள், உண்மை உறைக்கவே 'க்வாக்' என்றலறித் திரும்பிப் பார்த்தாள். தெளிந்தாள். ''நீயாடி இவளே?''

பாமாதான் நின்றிருந்தாள்.

தைரியமடைந்த மைதிலி சுழற்றலானாள். அவசரத்தில் ஒன்றை அவள் கவனிக்கவில்லை. எக்ஸ்டென்ஷனிலிருக்கும் பித்தானை மாற்றாமல் சுழற்ற, வார்டன் ருத்ரம்மாவின் அறை டெலிபோன் சத்தமிட, எழுந்த ருத்ரம்மா தூக்கக் கலக்கத்திலேயே, ''என்ன அங்கே ரோதனை? ஹூஇஸ் தேர்?'' என்று கத்தியதும், உளறிக் கொட்டி டெலிபோனை வைத்துவிட்டு ஓடிப் போய் அவர்கள் அறையில் நுழைந்துகொண்டார்கள்.

''அல்சேஷன் வருகிறது.''

சுரேஷ்குமார் ஓடி வந்து சொன்னதும் அறையின் சூழ்நிலை மாறி விட்டது.

இயல் பெயர் ஆதிசேஷன். அல்சேஷன் நாய் போன்ற நீண்ட முகம் இருப்பதனால் மட்டும் அந்தப் பெயர் வந்ததல்ல. புதிதாக நபர்கள் யாராவது ஹாஸ்டலில் வந்து தங்கினால் அவனுக்கு மூக்கிலே வியர்க்கும். மோப்பம் பிடித்து வந்து விடுவான் என்பதனால் அந்தப் பெயரே அவனுக்கு வைக்கப்பட்டது. அவனது மோப்ப மூக்கு இப்போது யமன்கள் பிரிவு பக்கமாகத் திரும்பியிருந்தது.

''என்ன ஸார், தூங்கலையா?'' ஜன்னல் வழியாக ஆதிசேஷன் எட்டிப் பார்த்துக் கேட்க, சாதுவாகப் பார்த்துக் கொண்டிருந்த சுரேஷ்குமார் பிலுபிலுவென்று சண்



"சில பேர் எஸ்.எஸ்.எல்.சி. பெயி லானு தண்ணியிலே குதிப்பாளே அது மாதிரியில்லாமே நான் பாசானுல் தண்ணியிலே குதிக்கப் போறேன்!"
"அடப்பாவி! காலேஜ் அட்மிஷன் கிடைக்காதுன்னு?"

டைக்குப் போக, அல்சேஷன் கத்த, தூங்கிக் கொண்டிருந்தவர்கள், (தலை வரை போர்த்திக் கொண்டிருந்த சேதுவைத் தவிர) எழுந்து அதட்ட, அமளி நடந்து கொண்டிருக்கும் போது......

"ஸைலன்ஸ்! என்ன அங்கே நியூஸென்ஸ்?" என்று வந்து சேர்ந்தார் வேடியப்பன். அவர் முகம் ஒரு முழத்துக்குத் தொங்கிப் போயிருந்தது. "சந்தர்ப்பம் தெரியாமல் என்ன கலாட்டா இங்கே? என்ன ஆதி? என்ன விஷயம்?"

"யாரோ கெஸ்ட் வந்தாற் போலிருந்தது ஸார். யாருன்னு பார்க்க வந்தால் 'அல்சேஷன்' நாயிங்கஞங்க ஸார். இன்னு ஸார் மரியாதையில்லாம......"

"சரி, சரி! நீ வேறு குரைக்காதே!" என்ற வேடியப்பன் அறை முழுவதும் நோட்டம் விட்டார். "நானே கவலையிலிருக்கிறேன். நீங்கள் வேறு தொல்லே தராதிர்களடா...." என்றவர் போகிற போக்கில், "போலீஸ் கம்ப்ளெயிண்ட் தர வேண்டியதுதான்" என்று கூறி விட்டுப் போனர். அவர் பின்னுலேயே அந்த அல்சேஷனும் முறைத்துக் கொண்டே போய்ச் சேர்ந்தது.

"போலீஸா?" என்று தலையைச் சொறிந்து கொண்டிருந்தவர்களிடம், "யாவ் யாவ்...." என்று அலறியவாறு, சட்டையைத் தூக்கி வயிற்றைக் காட்டியது அந்த வாண்டு. "பசிக்கிறதே!"

"என்ன ஆனுலும் சரி!" மைதிலி புறப்பட்டாள். "அங்கே என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாதவரை எனக்குத் தூக்கம் பிடிக்காது. நான் போய் போன் பண்ணத்தான் போகிறேன்."

"சொன்னுல் கேள்" என்ற பாமாவின் எச்சரிக்கையைச் சட்டை பண்ணுமல் நடந்து போனவள் நின்றுள். "டியே, ஒரு சந்தேகம். அங்கே போன் பண்ணினுல் அந்த வார்டன் வேடியப்பனுக்குத்தானே போகும். என்ன, ஏது, யார் என்று கேட்டால் என்ன சொல்லுவது?" என்று ஒரு விநாடி விழித்தாள். பிறகு, "இட்ஸ் ஆல் ரைட்! அவர் அக்கா பெயரைச் சொல்லிச் சமாளிக்கலாம்" என்றுள். வார்டன் அறையில் நுழைந்து, முதலில் எக்ஸ்டென்ஷன் பித்தானைத் தள்ளிச் சரி பண்ணி விட்டு நம்பரை வேகமாகச் சுழற்றினுள். ஆனுல்....

அங்கே எக்ஸ்டென்ஷனிலும் டயல் பண்ணும் ஓசை கேட்கும் என்ற விஷயம் அவளுக்குத் தெரியாது. இரண்டாம்தரமும் ஓசை கேட்டு எழுந்த ருத்ரம்மா சந்தேகப்பட்டு வந்து மறைவில் நின்று கவனித்தாள்.

"ஹலோ தர்மராஜன் காலேஜ் ஹாஸ்டல்? எம். என். ப்ளாக் பதினுலாம் நம்பர் அறை சேதுவைக் கொஞ்சம் அழைக்க முடியுமா?" என்றவள் கொஞ்சம் பொறுத்துச் சொன்னுள்: "குழந்தையை எடுத்துக் கொண்டு ஹாஸ்டலுக்குப் போனுர். குழந்தை தொல்லே தருகிறதா என்று பார்க்கத்தான்.... ஆமாம். என் குழந்தைதான்....." 'வீல்' என்ற திமர் அலறல் கேட்டு வெலவெலத்துப் போய்ப் பட்டென்று போனை வைத்துவிட்டுத் திரும்பினுள் மைதிலி.

"குழந்தையா? உன் குழந்தையா?" என்று அலறியவாறு, இடுப்பில் கைகளை வைத்து முறைத்துக் கொண்டிருந்தாள் வார்டன் ருத்ரம்மா.

"போலீஸ்!" ஓடி வந்தான் சுரேஷ்குமார். "வார்டன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணுகிருரடா."

"போலீஸா? போச் போச்...." என்று அலறினுன் சேது. "இதற்குச் சப்பாத்தியும் பாலும் கொண்டு வந்ததை அந்த அல்சேஷன் பார்த்தபோதே எனக்குச் சந்தேகம்."

"எனக்கும் ஒரு சந்தேகம்." சிகாமணி கேட்டான். "அவரைப் பார்த்தாலும் எதையோ தொலேச்சுட்டு விழிக்கிறவர் மாதிரி தெரியுதே! ஒரு வேளை இந்தக் குழந்தை அவருடையதாயிருக்குமோ?"

"அவர் இன்னமும் கல்யாணமே ஆகாதவர். அவரோட சொந்தக்காரங்களும் யாரும் இந்த ஊரில் கிடையாது. தெரிஞ்சுக்கோ. போலீஸுக்கு ஏன் போன் பண்ணினுர்னு தானே புரியல்லே."

"அட, போங்கடா, முட்டாப் பசங்களா!" பிரபாகரன் சொன்னுன். "கெஸ்ட் ஒருத்தனே அழைச்சிண்டு வர்றதென்ன 'கிரைமா' போலீஸைக் கூப்பிட....."

"அப்படிச் சொல்லாதே! இருட வந்தான்னு சாதிச்சு இந்தப் பையனேயேகூட ஜெயிலுக்கு அனுப்பி வைப்பானே."

"நான் ஜெயிலுக்குப் போமாத்தேன் போ" என்று அலறியது வாண்டு.

"ஏண்டா, கத்தறே? மென்னியை முறிப்பேன் ராஸ்கல்!" என்று சுரேஷ்குமார் அதட்ட..... பையனின் உதடுகள் பிதுங்கின. கண்கள் கலங்கின. 'ஆங்' என்ற ராகத்தோடு 'பிடி பிடி' என்று மற்றவர்கள் பதற, துரத்த, அறைக்கு வெளியே ஓடியே போய் விட்டான். இருட்டில் மூழ்கிக் கிடந்த வராந்தாவில் ஓடியவன் எதன் மீதோ மோதி விழுந்தான். டார்ச் வெளிச்சம் பளீரென்று வீச, இடுப்பில் கைவைத்து முறைத்தவாறு நின்றிருந்தது அல்சேஷன். எழுந்து நின்ற வாண்டு, அவனைப் பார்த்து, மூக்கைத் தூக்கி உதட்டைக் குவித்து ஒழுங்கு காட்டிவிட்டு ஓட....

''டாய் டாய்'' என்று கூவியபடியே அல்சேஷன் துரத்தியது.

''அங்கே..... அந்தப் பக்கம் போய்த் தேடு'' என்று யமன் குருப் பதறித் தேடும் போது ஆள் ஒருவன் வந்து வார்டன் அழைப்பதாகச் சொல்லிச் சேதுவை அழைத்துக் கொண்டு போனான். மூனு முனுப்புடன் வார்டனின் அறையில் நுழைந்தவன் திடுக்கிட்டு நின்றான். ருத்ரம்மாவின் பின்னால் பீதியுடன் நின்றிருந்தாள் மைதிலி.

ஹாஸ்டலின் எல்லாப் பகுதிகளிலும் விளக்குகள் எரிய, எல்லாரும் வெளியே வந்து நின்று, ''என்ன.... ஏது விஷயம்?'' என்று பதறிக் கொண்டிருந்தார்கள். 'எப்படியோ ஒரு திருடன் வந்து புகுந்து விட்டான்' என்ற வதந்தி பிறந்து, ''இல்லை, கொலைகாரன் ஒருத்தன் வந்து போலீசுக்குப் பயந்து ஒளிந்திருக்கிறான்'' என்பது வரை கணிசமான அளவு வளர்ந்தது.

''ஏய்...ய்...பிடி பிடி'' என்று அல்சேஷன் ஓடிவந்த போது படபடவென்று ஜன்னல்களும் சாத்தப் பெற்றன.

''நிறுத்துங்கள்.'' சேது அலறினான். ''நீங்களும், உங்கள் கற்பனையும்! நடந்ததை நடந்தபடி சொல்லிவிட வேண்டியதுதான்'' என்று ஆரம்பித்து ஆதியோடந்தமாய்க் கூறி முடித்தான். ''அவ்வளவுதான். அந்தப் பெண்ணின் பெயர் கெடக் கூடாதே என்றுதான் என் அக்காவின் விலாசம் தந்தேன். வேணுமானால் போலீஸில் விசாரியுங்கள்.''

''குழந்தை எங்கே கிடைத்ததென்றாய் ?'' பரபரப்புடன் கேட்டார் வேடியப்பன். ''ஹார்பரிலா? சொல்லப்பா சொல்லு.''

''ஹார்பரில் ஜப்பானிய மிதக்கும் பொருட்காட்சியைப் பார்க்கப் போன போது 'எஸ்கலேட்டர்' வழியே மாடி ஏறும்போது இதுவும் அவனுடன் ஒட்டிக் கொண்டு வந்து விட்டதாம். அது வந்து......''

''ஆ!'' — அவன் முடிக்குமுன் அலறிய வேடியப்பன் வெளியே பாய்ந்தார்.

''இவர் ஏன் பாய்கிறார்?'' ருத்ரம்மா சந்தேகத்துடன் கேட்டாள். ''இவர் குழந்தையா? ஆனால் கல்யாணமாகாத அவருக்கு ஏது குழந்தை.....?''

''சே...சே....'' அருவருத்தான் சேது... ''எப்பவும் உங்க கற்பனை அசிங்கமாய்த்தான் ஓடுமா?'' என்றவன், வேடியப்பனைத் துரத்தி ஓட, அவனைத் துரத்தி ருத்ரம்மா ஓட, அவளைத் தொடர்ந்து மைதிலியும் ஓடினாள். மெஸ்ஸிலிருந்து ஏதோ கடபுடா சப்தம் வானம் சரிவது போன்று கேட்கவே சட்டெனத் திரும்பி ஓடினார்கள்.

அரைத்து வைத்திருந்த இட்டிலி மாவு தரையில் தேங்கி நிற்க, அதில் புதையுண்ட தன் முகத்தை மெல்ல நிமிர்த்தினான் அல்சேஷன். ''ஹையா, ஹையா...'' என்று கையைத் தட்டியபடி துள்ளித் துள்ளிக் குதிக்கும் அந்த வாண்டைத் தாவிப் பிடித்துவிட்டான். ''விடு விடு'' என்று வாண்டு, அவனது கையைக் கடிக்க, அல்சேஷன் ''ஆய், ஊ.....'' என்று அலறியது.



## ''ஆசிரியருக்கு மாணவர் போட்ட மார்க்கு!''

எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் ஆசிரியர்கள்தான், மாணவர்களது விடைத்தாள்களைத் திருத்தி மார்க் கொடுப்பார்கள். ஆனால் ஜெர்மனியில் ஒரு பள்ளியில் மாணவர்கள் ஆசிரியர்களுக்கு மார்க் கொடுத்திருக்கிறார்கள்.

ஜெர்மனியிலுள்ள 'மூல் ஹெம்' என்ற நகரிலுள்ள ஒரு பள்ளியில் தான் இந்த அதிசயம் நடந்திருக்கிறது.

சில நாட்களுக்கு முன்பு ஆசிரியர்கள், மாணவர்களது பரீட்சை மார்க்குகளை அவர்களுக்குத் தெரிவித்ததும், மாணவர்கள் தம் ஆசிரியருக்கு மார்க்கு கொடுக்க ஆரம்பித்தனர். ஆசிரியருடைய போதனைத் திறமை, ஒழுங்கின்மை, நடத்தை, நேரம் தவறிப் பள்ளிக்கு வருதல் முதலியவற்றைப் பரிசீலனை செய்து ஒவ்வோர் ஆசிரியருக்கும் மார்க்கு கொடுத்தனர். சுமார், திருப்திகரம், திருப்தியில்லை போன்ற குறிப்புகள் தான் அவர்கள் கொடுக்கும் மார்க்குகள். அத்துடன் இவர்கள் ஆசிரியர் மீது 'ஒரே பாடத்தில் நேரத்தை வீணக்குகிறார்', 'சரிவர வீட்டுப் பாடம் கொடுப்பதில்லை' போன்ற குற்றச்சாட்டுகளையும் சுமத்தியுள்ளனர். ஆசிரியர்களும் தங்கள் தவறைத் திருத்திக் கொள்வதாகக் கூறியுள்ளனர்.

ஆதாரம்: ஜெர்மன் டிரிப்யூன்

தகவல்: ஸ்ரீதரன்

''என்ன; என்ன இங்கே கலாட்டா?'' என்று பதறியவாறு உள்ளே நுழைந்த நான்கு பேரும் வெள்ளைப் பிசாசு ஒன்று குழந்தையைப் பிடித்துக் கொண்டிருப்பது கண்டு ''ஐயோ!'' என்றலறித் திரும்பி ஓட முயன்றனர்.

''ஸார், ஸார்... நான்தான் ஸார்.... அல்சேஷன்'' என்றான் ஆதிசேஷன்.

''மாமா!'' என்று ஓடி வந்த குழந்தையை ''டேய், சுந்தா!'' என்று ஓடிப் போய்த் தூக்கிக் கொண்டார் வேடியப்பன். ''என் டியரஸ்ட் பிரண்டோட குழந்தை. ஜப்பான் மிதக்கும் கண்காட்சியைப் பார்க்க அழைத்துப் போனேன். வேடிக்கை பார்க்கிற சுவாரசியத்தில் இதை மறந்துவிட்டேன். சாயங்காலத்திலிருந்துதேடுகிறேன். இரட்டைவால். எங்கே தண்ணீரிலே விழுந்துட்டுதோன்னு தவிச்சுப் போயிட்டேன். இப்பத்தான் போலீஸிலும் தகவல் தந்தேன். டேய், சேது! அம்மா மைதிலி! ரொம்பத் தாங்க்ஸ்'' என்றவர் பாராட்ட வார்த்தைகள் கிடைக்காமல் தடுமாறினார்.

மைதிலியின் கழுத்து ஓரங்குலம் நிமிர்ந்தது என்றால், சேதுவின் சட்டைக் காலர் முழுக்க நிமிர்ந்தது. பெருமை பிடிபடவில்லை அவர்களுக்கு.

# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

21

ஜெகு ஒரே வாரத்தில் திரும்பவும் வந்து விட்டான். வரும்போத உற்சாகம் பிடிபடவில்லை. ''நாராயணா, நாடக மண்டலி திறப்பு விழா வருகிற புதன்கிழமை .... மந்திரி தலைமைவகிக்கிறார். அகண்ட ஜோதி தத்துவ வித்தகர், அபார சாமர்த்தியப் பிரசார அணுகுண்டு அவர்கள் திறப்புரை. வாழ்த்துரைக்கு நான், நீ என்று முப்பது பேர் போட்டி போடுகிறார்கள். கோவை மாநகர் முழுவதும் நம் சுவரொட்டிகள் பளபளக்கின்றன.



ஜெயசூரியாவின் போஸ் கண்ணைப் பறிக்கிறது, போயேன்!'' என்றான்.

''சபாஷ்!'' என்றான் நாணு.

''ஜெயசூரியாவின் அழகும் அவன் நாட்டியம் பிடிக்கிற பாவமும் பிரமாதம்.... அப்ஸரஸ்தான் அவள்... பேரூர் சிற்பம் என்னத்துக்கு ஆயிற்று? இவள் தனி ரகம். 'ஜெக்கு' என்று அவள் கூப்பிடுகிற அழகே அலாதிதான்.''

''சரிதான்.''

''ஏன் முகம் சுளிக்கிறாய்?... உனக்கென்ன தெரியும் இந்த அருமை!... பயப்படாதே, இது லவ் இல்லே. ரசனை. அவ்வளவுதான்.''

''நீ ஒரு வொண்டர்புல் டைப், ஜெகு!''

''மண்ணாங்கட்டி. யூஸ்லெஸ் டைப் என்று சொல்லு.''

''அதென்னவோ டாக்டர் உன்மீது உயிராக இருக்கிறார்.''



''இது ஒரு பெருமையா? டாக்டரின் பிரியம் மருந்துக்குக் கேடாக முடியும். ஒரு நர்ஸ் பிரியப்பட்டாலாவது பெருமைப் படலாம்.''

''ஜெகு!''

''பயப்படாதே... நோ லவ்!... சும்மாத் தமாஷ் செய்தேன். பழைய வாசனை விடவில்லே.''

கமலாவுக்கு அவனுடைய வெகுளித்தனத்தின் மீது அபிமானம்கூட வந்து விட்டது. தலையைத் திருப்பிக் கொள்ளாமல் காது கொடுப்பாள். விடியற்காலையில் சீதாவுடன் எல்லோரும் கோஷ்டியாகப் பாடுவார்கள். பிரபந்தத்திலிருந்து ஆண்டாள் பாசுரங்களையும், தேசிகரின் தனியன்களையும் சீதா பாடுவாள். கூட்டாக நாமாவளி பாடுவார்கள். பத்மநாபன் கண்ணை மூடியபடியே மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருப்பார்.

''இந்த மருந்து எனக்கு வேண்டும் அம்மா. உடம்பே புல்லரிக்கிறது. மனசு சிலிர்க்கிறது. வடிகட்டி அழுக்கையெல்லாம் களைகிற மாதிரி இருக்கிறது'' என்பார்.

ஜெகுகூடப் பாடுவான். அவன் பாடாமல் இருந்தால் தேவலே என்று தோன்றும். 'டுயட்' பாடிய வாயால் இப்போது நாமாவளி பாடுகிறானே, அது வரையில் புண்ணியம்தான்.

''நாணு, இன்றைக்குச் சாயந்திரம் நீ என்னோடு வர வேண்டும்'' என்றான் ஜெகு.

''எதற்காக?'' என்று கேட்டான் நாணு.

''என் நண்பர் வந்திருக்கிறார். நாட்டிய மண்டலி அமைக்கப் பணம் அனுப்புகிறவர் அவர்தான்.... அவரை நீ பார்க்க வேண்டாமா?''

''பார்த்தால் போகிறது.''

''அரைகுறையாகச் சொல்லாதே. நீ அவரைப் பார்த்தே ஆக வேண்டும். மனிதர் தங்கக் கம்பி. பார்ப்பதற்கு முரட்டுத்தனமாகத் தோன்றும். உள்ளூற நல்ல மனிதர். என்னிடம் உயிர் அவருக்கு.''

''சந்தோஷம், ஜெகு.... இப்படி நல்ல உறவுகள் நமக்கு அவசியம்தான்....''

''வெறுமே சொன்னால் ஆயிற்று.... என் கதை முழுவதும் அவருக்குத் தெரியும். அவர் கதையும் எனக்குத் தெரியும். என்னையும் நம்பிப் பணம் தருகிறவர் சாமானியமான ஆளா இருப்பாரா? நீயே சொல்லு. ஆனால் உன்னிடம் சொல்வதற்கென்ன? அவரும் என் 'டைப்'தான். நான் உளறிக்கொட்டுவேன். அவர் அழுத்தக்காரர். பெண்களெல்லாம் அவர் காலடியில் கிடக்கிறார்கள்.''

''கடவுளே! மறுபடியும் பழைய கதை தானா...?''

''நோ. நோ.... நான்தான் மாறிவிட்டேனே! இனி எந்தப் பெண்ணும் என் மனசில் புக முடியாது நார்யாணு....ஏர்டைட் ஆகிவிட்டது மனசு.... ஸாரி.... லவ் டைட் ஆகி விட்டது மனசு.'' ஜெகு விமரிசித்துச் சிரித்தான்.

அவனைப் பார்க்கப் பரிதாபமாகவும் இருந்தது: சந்தோஷமாகவும் இருந்தது. ஏதோ ஒரு மாற்றம், திருப்பம் அவன் நெஞ்சில் நிகழ்கிற தருணம் இது. ஆனால் அந்தத் திருப்பம் பழைய கதியிலேயே ஓடாமல் இருக்குமா? யார் கண்டார்கள்?

''நானும் வரலாமா உங்கள் நண்பரைப் பார்க்க?'' கமலா கேட்டாள், வேடிக்கையாகத்தான்.

''நீயா.... ஊஹூம்'' என்றான் ஜெகு.

''ஏன்?''

''நீ எதற்கு?.... நாங்கள் ஏதாவது ஊர்க் கதை பேசிக் கொண்டிருப்போம். பெண்கள் வரக் கூடாது.''

நாணு கமலாவைப் பார்த்து முறுவல் பூத்தவாறே, ''இது ஆண்கள் நாட்டிய மண்டலி, கமலா..... ஜெகு புதுமை செய்கிறான் '' என்றான்.

ஜெகு கையை உதறி, ''அதல்ல, நார்யாணு..... எனக்கு அந்த உறவு சரி. கமலாவுக்கு எதற்காக? அவளுடைய சூழ்நிலைக்கும் என் விவகாரங்களுக்கும் சரி வருமா?'' என்றான். வேறு வார்த்தைகளால் அவனுக்கு அதைச் சொல்லத் தெரியவில்லை.

வேறு வார்த்தைகள் தேவையுமில்லை. கமலா புரிந்து கொண்டு உள்ளே போய் விட்டாள். நாணுவும் ஜெகுவும் மட்டும் புறப்பட்டனர். வழி நெடுகத் தன் அருமை நண்பரைப் பற்றி வர்ணித்தான் ஜெகு. அப்படி ஒன்றும் அவர்களுக்குள் நெருங்கிய பழக்கம்கூட இல்லையாம். முதற்சந்திப்பே முற்றிய நட்புறவாகி விட்டதாம். 'ஒரு லட்சம் வேண்டுமா, இரண்டு ரூபாய் தரவா?' என்று அலட்சியமாகக் கேட்டாராம். லட்சத்தில் ஒன்று இரண்டு என்று பேசுபவர் பெரிய புள்ளியாகத்தானே இருக்க வேண்டும்!

அப்படிப்பட்ட வள்ளல் யார் என்று அறிந்துகொள்ள நாணுவுக்கே துடிப்பு ஏற்பட்டுவிட்டது.

ஆனால் அந்த நண்பரைப் பார்த்த போது நாணு திகைத்தே விட்டான்.

அந்த நண்பன் வேறு யாருமில்லை—கோபால்தான் !

சிலரைச் சந்திப்பதில் உவகை கொள்கிற மனம் சிலரைச் சந்திப்பதில் வெறுப்புக் கொள்கிறது. சிலவற்றில் பற்றுக் கொள்வதும் இவ்வாறே மனத்தின் இயல்பாக இருக்கிறது. ஆனால் விலக முயன்றும் விலக முடிவதில்லை. நாடிய பொருள் விலகியே நிற்கிறது. மன இயல்புக்குப் புறம்பான வலிய மற்றொரு சக்தியின் விளையாட்டோ இது !

தந்தையைக் காண இயலாமல் அத்தானுடன் நாணு சென்னைக்கு வர வேண்டியதாயிற்று. கோபாலை மீண்டும் சந்திக்கவே விரும்பாதவனின் — எதிரே அவன் வந்து நிற்கிறான். ஆசையின் மடியில் நிராசை மலர்வானேன்!

''நீங்களா? வாங்க... வாங்க...'' என்றான் கோபால். முகமெல்லாம் மலர.

''அட, இவரை முன்பே தெரியுமே எனக்கு'' என்றான் கோபால். பிறகு சமாதானம் கூறுவது போல, ''அதிலே பாருங்க அந்தக் குஞ்சராமன் இப்படித்தான் ஏதாவது இசைகேடாய்ச் செய்து விடுவான். நான் ரொம்பக் கண்டிச்சேன் அவனை. பெரிய தொந்தரவாய்ப் போச்சுங்க அன்னிக்கி'' என்றான்.

நாணு வெறுமே சிரித்தான்.

''நீங்ககூட என்னைத் தப்பா எண்ணியிருப்பீங்க. வாஸ்தவத்திலே எனக்கு விவரமே தெரியாது. நான் அவனை நம்பிட்டேன். அந்தப் பொண்ணுக்காகத்தான் போனாப் போறதுன்னு விட்டுப் பிடிச்சேன். இல்லாட்டி கோயம்புத்தூரிலே நமக்குத் தெரியாத ஆளுகளா?''

''இப்போது அந்தக் கதை எதற்குக் கோபால்? நான் எல்லாவற்றையும் மறந்து விட்டேன்'' என்றான் நாணு.

''ஹி...ஹி... நானும் மறந்துட்டேனுங்க. போலீசிலே ரொம்ப ரவுசாயிப் போச்சு, போங்க.... என்ன சாப்பிடறீங்க?''

''எதுவும் வேண்டாம்.''

''அப்படிச் சொல்லக் கூடாதுங்க. காப்பியாவது...''

''சரி... சீக்கிரம் கொண்டு வரச் சொல்லுங்கள்.''

கோபால் உரத்த குரலில் 'பாய்!' என்று அழைத்தான். அந்த பாய் வந்து நின்றதும், ''போய் மூணு காப்பி கொண்டு வா.... இந்தாப்பா. நாலாகக் கொண்டு வா'' என்றான்.

''நாலு எதுக்குக் கோபால்?'' என்றான் ஜெகு.

''அதுவா? சொல்ல மறந்துட்டேனே... ஜெயா வரதாகப் போன் செய்திருக்கு. அஞ்சு மினிட்லே வரதாச் சொன்னா. அரை மணி ஆச்சு.''

''ஜெயசூரியா வருகிறாள்! வொண்டர்ஃபுல்! நார்யாணு, நீ அதிர்ஷ்டம் செய்தவன். அவளைப் பார். பிறகு உன் அபிப்பிராயத்தைச் சொல்லு.''

''அபிப்பிராயம் சொல்றதுக்கு என்ன இருக்குது?'' என்றான் கோபால். ''ஏ கிளாஸ் ராக் அண்ட் ரோல். குறவன்—குறத்தி, சிவா—பார்வதி டான்ஸெல்லாம் அபாரமுங்க. ஜெக்கு, அதுக்கு இரண்டு படம் 'புக்' ஆகியிருக்குதாம்.''

''அப்பமென்னா நீங்க ஏன் காப்பி வாங்கித் தரீங்க? ஜெயசூரியா வாங்கித் தரட்டுமே!''

கோபாலும் ஜெகுவும் சிரித்தனர். இச்சமயம் விநோதமான வாசனைத் திரவியங்களின் மணமும், அரகஜாவின் நெடியும் ஸ்நோ, பவுடர், புனுகு, ஜவ்வாது, பவுடர்களின் கலவையும் முந்தி வர ஜெயசூரியா வந்தாள். கைகளை அழகாகக் குவித்துத் தலையைச் சற்றே சாய்த்து, ''வணக்கமுங்க'' என்றாள். நகங்களில் சிவப்பு மின்னிற்று. தலையில் கனகாம்பரம் கனத்தது.

''வா, ஜெயா, உட்காரு'' என்றான் கோபால்.

புல்லரிக்கும் மக்ளீன்ஸ்

சுவை மூலம்

உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!




மக்ளீன்ஸ்

3 வகைகளில் செயலாற்றுகிறது

1 சுத்தமாக்க – சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.

2 வெண்மையாக்க – படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.

3 காக்க – திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கிறது.

அதிவெண்மையான பற்களுக்கு –

மக்ளீன்ஸ்

MTP-I-P-I-65/66 TM

ஜெகுவின் வாய்கள் விழியாகி விட்டன. நாணுவுக்கோ வாயும் விழியும் மூடிக் கொண்டன. கொத்துக் கரண்டியால் கரண்டி எடுத்தால் தவிர அந்த ஜெயசூரியாவின் மீது அப்பியிருந்த கலவைகள் உதிரா என்று தோன்றிற்று. அத்தனை செயற்கைப் பூச்சு! இந்தப் பூச்சின் கீழே பெண்மையா இருக்கிறது!

''இவர் யார் தெரியுமா?''

''தெரியலீங்களே!''

''தொழிற் சங்கத் தலைவர் மிஸ்டர்... பேர் என்னங்க?''

''நார்யாணன்'' என்றான் ஜெகு.

''ஆமாம். நாராயணம். நம்ம பக்கம் தான். நமக்கு ரொம்ப வேண்டியவங்க.''

''வணக்கமுங்க அண்ணாச்சி!'' என்றாள் ஜெயசூரியா.

அவளைப் போலொரு தங்கை தனக்கு வேண்டவே வேண்டாம் என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்ட நாணு, காப்பி எப்போது வரும், எப்போது நழுவலாம் என்று தவித்தான். அவளும் அப்படியொரு அண்ணன் வேண்டும் என்று விரும்பியவளாகத் தெரியவில்லை. பேச்சு நாடகமாக, நாட்டியமாக விரிந்தது.

''புதன் கிழமை புரோக்ராம். தவறாமல் வந்துடணும். கார் அனுப்பிடறேன் ஜெயா!'' என்றான் கோபால்.

''வரேனுங்கே...இன்னிக்குக்கூடப் பாடத்தைப் பார்த்தேன். கரடு முரடா இருக்குதுங்க பாட்டு.''

''மாத்திட்டாப் போவுது... லேசாக பாட்டுக் கட்டினா இப்படித்தான். மயூர் தாசைப் புக் பண்ணிடலாம். ஜெக்கு, எப்படி அபிப்பிராயம்?''

''மயூர்தாசு வொண்டர்ஃபுல்லாச்சே, கோபால். 'நிலவுக் கிழவா வா, நீ என் அருகில் வா'ன்னு ஒரு பாட்டு பாடியிருக்கிறாரே, அதைக் கிழவி முதல் குமரிவரை பாடறாங்களே!''

நிலவைக் கிழவனாக்கிய கற்பனையை இது வரை யாரும் செய்திருப்பதாக நாணுவுக்குத் தெரியவில்லை. சந்திரன் எவ்வளவு காலமாக இருக்கிறான். அவனுக்கும் வயதாகியிருக்கத் தான் வேண்டும். ஆனால் காலத்தில் மூப்படையாத நித்ய வஸ்துக்கள் உண்டல்லவா? இதோ ஜெயசூரியா இல்லையா? இவள் வயதை யார் அறிவார்? காப்பி வந்தது. குடித்து முடித்ததும் நாணு புறப்பட்டான். வழி அனுப்ப வந்த ஜெகு கேட்டான்: ''ஜெயசூரியா எப்படி?''

''ஜெகு, இந்த பிஸினஸ் உனக்கு வேண்டாம்'' என்றான் நாணு.

''நாசமாய்ப் போச்சு... இரண்டு நாளிலே திறப்பு விழாவை வைத்துக் கொண்டு வேண்டாம் என்கிறாயே! ஏன், அவளுக்கு என்னவாம்? நார்யாணு, என்னை டிஸ்கரேஜ் செய்கிறாயே!''

''நான் என்ன செய்யட்டும், ஜெகு? என் அபிப்பிராயத்தைச் சொன்னேன்.''

''அது போகட்டும், கோபால் எப்படி?''

நாணு சிரித்தான்.

''சொல், நார்யாணு!''

''அவனுடைய நட்பும் உனக்குத் தகாது, ஜெகு!''

''ஓ! மை காட்! நார்யாணு, வாட் ஈஸ் திஸ்?...''

''உனக்கு உலகம் புரியவில்லை, ஜெகு. இவ்வளவு இடங்களில் இவ்வளவு ஜனங்களுடன் பழகியும் மனிதர்களின் தரம் தெரியவில்லையே, உனக்கு.''

''கோபாலுக்கு என்மீது உயிர். கிணற்றில் விழச் சொல்லட்டுமா, விழுவார்... அத்தனை நல்ல மனிதர் அவர்! அவரை நான் நம்புகிறேன்!'' என்றான் ஜெகு.

இருவரும் கிணற்றில்தான் விழுந்திருக்கிறார்கள் என்று நாணுவுக்குத் தோன்றிற்று.

**நா**ணு அங்கிருந்து புறப்பட்டான். ஜெகுவின் புது நட்புக்களை நினைத்து அவன் மீது பரிதாபப்படுவதைத் தவிர வேறு வழியில்லை. இந்த நட்புக்கள் தனக்கு வாய்த்த வரப் பிரசாதங்கள் என்று ஜெகு நம்புகிறானே! என்ன பேதமை! ஆனால் யார் கண்டது! நம்புவதாலேயே சில மாயங்கள் நிகழ்ந்து விடவும் கூடுமே! திருடன் கூடத் தெய்வத்தை நம்புவதில்லையா?

''உன் நண்பனை எங்கே காணோம்?'' என்று திரும்பி வந்த நாணுவைக் கேட்டாள் கமலா.

''அவன் நாடக நாட்டிய மண்டலி அமைப்பில் ஈடுபட்டிருக்கிறான்... நண்பர்களுடன் அது பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறான்'' என்றான் நாணு.

அவனுக்கு லட்சுமி அம்மாள் கடிதம் எழுதியிருந்தாள், அவனுடைய தந்தை வந்திருந்தாராம். 'என் மகனை விதி என்னிடமிருந்து பிரிக்கிறபோது, நான் எப்படி அவனைப் பார்க்க முடியும்?' என்று வருத்தப்பட்டாராம். மறுபடியும் ஒரு மாதத்துக்குள் வருவதாகச் சொல்லிப் புறப்பட்டுப் போயிருக்கிறாராம். பாருக்குட்டி அடிக்கடி வந்து போகிறாளாம். 'முன்போலச் சிரித்துச் சிரித்து அவள் பேசுவதைப் பார்த்தால் நீ சந்தோஷப்படுவாய், குழந்தை! 'மதராஸ் அட்ரஸ் கொடுங்கள், போய்ப் பார்த்து வருகிறேன்' என்று அடம் பிடிக்கிறாள் என்று எழுதியிருந்தாள்.

அப்பா சென்னை வந்திருக்கலாமே! அவர் ஏன் வரவில்லை?

நாணுவுக்கு வருத்தமாக இருந்தது.

ஜெகுவும் வருத்தமாக இருந்தான். டாக்டரிடம் போய் மருந்தை வாங்கி வந்து கொடுத்த பிறகு தன் அறைக்குள் புகுந்தவன் வெளியே வரவே இல்லை. மேஜை மீது தாறுமாறாகக் காகிதங்கள் கிடந்தன.

''ஜெகு சாப்பிடவே வரவில்லை. அவனுக்கு என்ன வந்து விட்டது?'' என்று கேட்டாள் ருக்கம்மாள்.

''யார் கண்டார்கள்?'' என்றாள் கமலா.

நாணு மட்டும் சாப்பிட்டானா? சாப்பிட்டதாகப் பெயர் செய்தான். பசி நெஞ்சில் இருக்கிறபோது வயிற்றில் உணவு இறங்குமா?

மாலையில் ஜெகு வெளியே போனபின், நாணு அவனுடைய அறைக்குள் சென்று பார்த்தான். மேஜை மீது கிடந்த காகிதங்கள் ஜெகுவின் கவலை தோய்ந்த மனத்

ஜைப் போகப் பட்டடத்தன. பேனுவின் அனனுடைய கடிதங்களின் ரகங்களை அறிந்தவனாதலால் இப்போது ஜெகுவின் மனப் போராட்டத்துக்கும் ஏதோ ஒரு கடிதம் காரணமாக இருக்க வேண்டுமென்று தோன்றிற்று. இவ்வாறே காலமெல்லாம் கடிதங்களிலேயே காதலை வளர்ப்பதும் இழப்பதுமே ஜெகுவின் சரித்திரமாக ஆகிவிடுமோ!

பாவம், ஜெகு!

''என்ன அது நாணு?'' என்றவாறே வந்தாள் கமலா.

மேஜை மீது கிடந்த கடிதமொன்றைக் கையில் எடுத்த நாணு அவள் வரவால் சற்றே அதிர்ச்சியடைந்தான். அவளுக்கு என்ன பதில் சொல்வது? ஜெகுவின் கடிதங்களைப் பற்றிக் கமலா தெரிந்து கொள்ளாமல் இருப்பதே நல்லதல்லவா?

''ஒன்றுமில்லை...'' என்ருன்.

''அது என்ன கடிதம் உன் கையில்?''

ஜெகுவுக்கு யாரோ ஒருத்தி எழுதிய கடிதமாக அது இருக்கலாம். அவனிடம் எல்லாமே வெளிப்படையானதால் மேஜைமீது வீசி எறிந்து விட்டுப் போயிருக்கிருன். காதலையே உதறி எறிகிறவனுயிற்றே!

நாணு பதிலேதும் சொல்லாமல் அந்தக் கடிதத்தை அவள் பார்வையிலிருந்து மறைப்பதைக் கண்ட கமலாவுக்கு ஆர்வம் அதிகமாகிவிட்டது. ஜெகுவும் அன்று முழுவதும் ஏதும் சாப்பிடாமல் கவலையே உருவாக இருந்தானல்லவா? எனவே கடிதம் யாரிடமிருந்து வந்திருக்கும் என்று யோசித்தாள். ஒருவேளை அத்தை எழுதியிருப்பாளோ! இருக்கலாம்! அவளுக்குத்தான் எத்தனை கோபம்? சொந்த அண்ணனுக்கு இத்தனை உடல் நலக் குறைவென்று தெரிந்தும் ஒரு முறை வந்து பார்க்கக் கூட அவளுடைய கர்வம் இடம் தரவில்லையே!

''நீ இதைப் பார்க்கக் கூடாது, கமலா! ஜெகுவின் கடிதங்கள் தனி ரகம்'' என்ருன் நாணு.

கமலா அவனை உற்றுப் பார்த்தாள். கடிதத்தை அவன் காட்ட மாட்டான் என்று நிச்சயமாகத் தெரிந்தது. எனவே திரும்பிஞள். அவள் திரும்பியதைக் கண்ட நாணு சற்றே நிம்மதியாகக் கடிதத்தைப் பிரித்தான். அந்தச் சமயம் பார்த்துக் கமலா ஒரே தாவலில் பாய்ந்து அந்தக் கடிதத்தை அவனிடமிருந்து பறித்துக் கொண்டு ஓடிஞள்.

''கமலா...கமலா!'' என்று நாணு அவளைத் துரத்திஞன்.

''நான் தரமாட்டேன்'' என்ருள் அவள்.

''அதையெல்லாம் நீ படிக்கக் கூடாது... ஏதாவது கன்னு பின்னுவென்று இருக்கும்.''

'' எதுவாக இருந்தாலும் சரி, படித்துவிட்டுத்தான் தருவேன்.''

நாணு தன்னைத் துரத்திக் கொண்டே வருவதைப் பார்த்த கமலா அவனிடமிருந்து தப்பிக்க ஒரே ஒரு இடம்தான் உண்டு என்று தெரிந்து அத்தான் படுத்திருந்த அறைக்குள் நுழைந்து விட்டாள்.

இதை எதிர்பாராத நாணு திகைத்து நிலைப்படியருகில் நின்று விட்டான்.

''என்னம்மா, ஏன் இப்படி ஓடி வருகிறு?'' என்ருர் பத்மநாபன்.

கமலா வெற்றிப் புன்னகையுடன், ''இந்தக் கடிதத்தை நாணு மறைக்கப் பார்த்தான். நான் பிடுங்கிக் கொண்டு வந்து விட்டேன்'' என்ருள்.

''என்ன கடிதம் அது?''

அவள் பதில் சொல்வதற்குள், ''கமலா... கடிதத்தை உன் அறையில் போய்ப் படியேன்... அத்தானும் அதைப் பார்க்க வேண்டுமா, என்ன?'' என்ருன் நாணு.

பத்மநாபன் சிரித்தவாறே, ''பரவாயில்லை நாணு... எந்த அதிர்ச்சியையும் என்னுல் தாங்கிக்கொள்ள முடியும்'' என்ருர்.

வேறு வழியில்லை. நிலைமை கைமீறிப் போய்விட்டது.

ஜெகுவின் அறைக்குள் அவள் நுழைந்திருக்கவே கூடாது. அந்த வெகுளியின் அந்தரங்கத்தை அவளுகவே அம்பலப் படுத்தியதாக ஆகிவிட்டது.

கமலாவின் விழிகள் கடிதத்தின் மீது படர்ந்தன. திடீரென்று அவள் கண்கள் கலங்கின. உதடுகள் துடித்தன. கடிதத்தை மடித்து நாணுவிடம் கொடுத்து விட்டு வெளியே ஓடி விட்டாள்.

இப்போது நாணுவின் தலையில் அந்தப் பொறுப்பு — கடிதத்தை அத்தானிடம் காட்ட வேண்டிய பொறுப்பு — விழுந்து விட்டது.

''படி.... நாணு...கமலா தவித்ததைப் பார்த்தால் விஷயமே என்னவாக இருக்குமோ என்று எனக்குக் கவலை ஏற்படுகிறது'' என்ருர் அவர்.

நாணு படித்தான்... என்ன விந்தை? ஜெகுவுக்கு வந்த கடிதம். ஆனுல் அது ஜெகு எழுதிய கடிதம்!

''அம்மாவுக்கு ஆயிரம் நமஸ்காரம் செய்து உதவாக்கரை அயோக்கியன், அல்ப சகவாச ஜெகு எழுதியது. — மாமா துரும்பாய்ப் போய்ப் படுத்த படுக்கையாகக் கிடக்கிருரம்மா. அவரைப் பார்க்க நீ வரமாட்டாயா? உன் பிள்ளை திருடன், கெட்டவன், ஆனுல் உன் அண்ணு — என் மாமா — உத்தமர். இல்லையா, அம்மா? நான் கெட்டழிந்து போவேன் என்று சொன்னுய். அப்படியே அழிந்து கொண்டிருக்கிறேன். என்னுல் உனக்கு ஒரு சுகமுமில்லை. என்னை ஏன் பெற்ருய் அம்மா? யாருக்காக நான் வாழ வேண்டும்? உன்னைப் பல தடவை மிரட்டி உருட்டிக் காசு வாங்கி என் போக்கில் அலைந்து செய்த தீமைக்கெல்லாம் பரிகாரமாக உனக்கு ஏதாவது நன்மை செய்ய வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். என்ன செய்வது என்று தெரியவில்லை. மாமா மேல் உனக்கு இருக்கிற கோபத்தை விட்டு விடும்படி செய்யலாம் என்று தோன்றிற்று. இது நன்மைதானே? அம்மா, இங்கே ஒரு தடவை வாயேன். காலையில் பஜனை செய்கிறோம் நாங்கள். பஜனைன்னு பஜனை; வொண்டர்ஃபுல் பஜனை. எனக்கே அழுகை வரது. நெஞ்சு விம்முகிறது. சீதா பாடுகிருள். அவளுடைய குரல் வொண்டர்ஃபுல். கமலா,

தான், ருக்கம்மா எல்லோரும் பாடுகிறோம். என் குரல்தான் கோரஸுக்குச் சரியாக இருப்பதில்லை. நீ சொல்வாயே, கர்த்தபக் குரல்னு, அப்படி இருக்கிறது.

''எனக்கு எதுவும் பிடிக்கவில்லை. உயிரை விட்டுவிடலாம் என்று பார்க்கிறேன். அதற்கு முன்னாலே ஏதாவது ஒரு நல்ல காரியமாக, 'ஹிட்' செய்யறாப்பலே செய்துவிடணும். பிறந்ததுக்கு இதுவரை கண்டபடி அலைந்தாயிற்று. புத்தி வந்தபோது எல்லோருக்கும் பிடிக்காதவனா மூலையிலே நிற்கிறேன். நீயாவது என்னை மன்னித்து ஆசீர்வாதம் செய்ய மாட்டாயா, அம்மா? உன் காலில் விழுந்து அழுகிறேன். உன் ஆசீர்வாதம் வேணும் எனக்கு...'' நாணு படித்துக் கொண்டே வந்தான். கடிதம் அத்துடன் நின்று விட்டது. ஜெகு அதை முடிக்காமலேயே வெளியே புறப்பட்டு விட்டான் போலிருக்கிறது.

''அதிசயங்கள் ஆயிரம் இருக்கலாம். நாணு... ஜெகுவின் போக்கு இப்படி மாறியது அவன் பாஷையிலேயே சொன்னால் வொண்டர்ஃபுல். இல்லையா?'' என்றார் பத்மநாபன்.

''ஆமாம் அத்தான். நான் இப்படி ஒரு கடிதத்தை எதிர்பார்க்கவில்லை. வழக்கம் போல ஏதாவது கன்னா பின்னாவாக இருக்குமென்று நினைத்துத்தான் கமலா அதைப் பார்க்கக் கூடாதென்று தடுத்தேன்.''

அவர் தலையை ஆட்டினார். ''கல்யாணி வரவேயில்லை, பார்த்தாயா?... என் நெஞ்சில் அந்த வேதனை இருக்கத்தான் இருக்கிறது. நாணு... உன் அப்பா கூடக் கோயம்புத்தூர் போனவர் வரவேயில்லை. அந்த வேதனையும் இருக்கிறது. நாமெல்லாம் பாசத்தை எடை போட்டு ஜாக்கிரதையாகக் கையாள்கிறோம். ஆனால் இந்த ஜெகு....'' என்றார்.

கமலா கூட அல்லவா ஜெகுவின் கடிதத்தைப் படித்துக் கலங்கி விட்டாள்!

''ஜெகுவால் அப்படிக் கூட எழுத முடியுமா என்று ஆச்சரியமாக இருக்கிறது'' என்றாள் அவள்.

ஆனால் இந்த வியப்பையோ அல்லது பாராட்டையோ ஜெகு ரசிக்கத் தயாராக இல்லை. நாணு தன் அறைக்குள் புகுந்து அதை எடுத்ததைக் கண்டித்தான். ''நான் ஏதாவது பிதற்றுவேன். அதை நீ ஏன் பார்த்தாய்?'' என்றான். ''அழகுதான் போ. உன் காதல் விவகாரத்தை யெல்லாம் நான் பார்க்க அனுமதித்தாய். இந்தப் பாச வெளியீட்டைப் பார்க்கக் கூடாதோ?'' என்றான் நாணு. ''ஊஹூம். நான் சிரிக்கிறதை நீ பார்க்கலாம். அழுவதை எதற்காகப் பார்க்க வேண்டும்?'' என்று கேட்டான் ஜெகு.

எவ்வளவு அழகாகக் கேட்டு விட்டான்! நாணுவுக்கே வியப்புத் தாளவில்லை. நிச்சயமாக நாணு எண்ணியது போல அவனுள் ஏதோ ஒரு திருப்பம் நிகழ்ந்து கொண்டுதான் இருந்தது.

''எனக்கு உலகத்திலே இப்போது இரண்டே ஆசைகள்தான் உள்ளன, நார்யாணு. ஒரு ஆசை என்னவென்பதைக் கடிதத்தில் பார்த்திருப்பாய். என் அம்மா ஒரு 'ஸ்டுபிட் உமன்' தான். எல்லோரையும் திட்டிக் கொண்டே இருப்பாள். ஆனால் என்னிடம் அவளுக்கு எத்தனை பாசம், தெரியுமா? நான் யூஸ்லெஸ்ஸாகப் போனதுக்கு அவளுடைய அபரிமிதமான அன்புதான் காரணம். தன் பிள்ளை தப்புச் செய்கிறான் என்று அவள் நினைக்கவில்லை. நான் ஆசைப்பட்டதைப் பெற வேண்டும் என்று அவள் கேட்டபோதெல்லாம் பணம் தந்தாள். கெட்ட சகவாசம் வந்து விட்டதே என்று பொருமுவாள். ஆனாலும் என் வழியில் விட்டு விட்டுக் கத்திக் கொண்டிருப்பாளே தவிர என்னைத் தடுக்க மாட்டாள். உன் அம்மா மாதிரி அவள் வொண்டர்ஃபுல் டைப் அல்ல. ஆனாலும் அம்மா அம்மாதானே? நார்யாணு!''

நாணு தலையை ஆட்டி ஜெகுவின் கருத்தை முதன் முறையாக முழு மனத்துடன் ஆமோதித்தான்.

''இன்னோர் ஆசை. நான் ஏதோ கொஞ்சம் மாறின மாதிரி இருப்பது உன்னாலே தானே? நார்யாணு! நீ கெட்டிக்காரன், அதிர்ஷ்டக்காரன். என்னைப் போல் கண்டபடி அலைகிறவன் இல்லை. நீ வாழத் தெரிந்து கொண்டிருக்கிறவன். உன் திருமணக் காட்சியை நான் பார்க்க வேண்டும். சினி காமிரா நிபுணர்கள் நாலு பேரைக் கொண்டு வந்து படமெடுக்கச் சொல்லி ஒரு பத்து ரீல் தயார்செய்து பார்த்துப்பார்த்துமகிழணும்.''

---

## கிரிக்கெட்டுக்குத் தடை!



கிரிக்கெட் ஆட்டத்தினால் நாட்டின் முன்னேற்றம் தடைப்படுகிறது என்று கிரிக்கெட் விளையாட்டுக்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. சமோவா தீவுகளில்! சமோவாவாசிகள் கிரிக்கெட் பிரியர்கள். நேரம் போவது தெரியாமல் வாரத்தில் ஏழு நாட்களும் கிரிக்கெட் ஆடிக்கொண்டே இருப்பார்கள்.

அண்மையில் பெரும் புயல் ஒன்று அத்தீவுகளைத் தாக்கியது. அதனால் கிராமங்களுக்கும் பழத் தோட்டங்களுக்கும் நிறையச் சேதம். ஆனால் அந்த மக்களோ அதைப் பற்றிக் கவலையே கொள்ளவில்லை. உல்லாசமாகக் கிரிக்கெட் விளையாட்டிலேயே காலம் கழித்துக்கொண்டிருந்தனர். இதைக் கவனித்த இத்தீவுகளின் பிரதமர் ஃபியாமி மாடா ஆஃபா ஓர் உத்தரவு போட்டுவிட்டார். இதன்படி இத்தீவுவாசிகள் புதன்கிழமையும் சனிக்கிழமையும்தான் கிரிக்கெட் விளையாடலாம். மற்ற நாட்களில் ஆடக்கூடாது; வேலை செய்ய வேண்டும். - ஆதாரம்: ஆசிய மாணவன் - ஏ.கே. கந்தசாமி

நாணுவுக்கு ஜெகுவின் இந்த ஆசையைக் கேட்டு உள்ளூற வேதனை கலந்த மகிழ்ச்சி சுரந்தது.

''ஜெகு!'' என்று இழுத்தான். தொடர்ந்து ''எனக்குத் தெரியும், கமலா உன் மீது உயிராக இருக்கிறாள். நார்யாணு...அவனையே நீ...'' என்றான் ஜெகு.

நாணுவின் விழிகள் புதைந்து விட்டன. நண்பனை விதிர்த்துப் பார்த்தான்.

''அடேயப்பா! உன் பார்வை ரொம்பச் சுடுகிறது!'' என்று சிரித்தான் ஜெகு.

''இனிமேல் இப்படிப் பேசாதே, ஜெகு!'' என்று கோபித்துக் கொண்டான் நாணு.

''ஏன்? பேசினால் என்னவாம்? நீ சந்நியாசியாகவே இருக்கப் போகிறாயா?''

''அதல்ல.''

''அப்படி என்றால் சும்மா இரு.''

ஜெகு போய்விட்டான் வேகமாக. இரவே அவன் கோவை போக வேண்டியிருந்தது. நாடக நாட்டிய மண்டலியின் திறப்பு விழா முடிந்த பின் மீண்டும் அவன் வருவான். அதற்கு முன் இங்கே ஓர் அழகான நாடகத்தை, அற்புதமான நாட்டியத்தை நடத்தி விட்டல்லவா அவன் போகிறான்!

நாணுவும் கோவை போக வேண்டும். அத்தானின் உடல்நிலை இன்னும் சற்றுச் சீர்ப்பட்டும் என்றிருந்தான். அவரோ அவனை அனுப்பினாரில்லை. 'கமலாவுக்குப் படிப்புக் கெட வேண்டாம். அவள் போகட்டும். நீ உன் வேலைகளை வேறு யாரிடமாவது ஒப்படைத்து விட்டுக் கொஞ்ச நாளைக்கு இங்கேயே இரு, நாணு'' என்றார். மறுக்க முடியவில்லை அவனால்.

எனவே கமலாவும் சீதாவும் புறப்படத் தயாரானார்கள். ஜெகுவும் போவதானால் அவனுடனேயே போய்விடலாம் என்று நாணு சொன்னான். கமலா போனாற் போகிறதென்று ஒப்புக் கொண்டாள். சீதாவும் அரை குறையாகத் தலையை ஆட்டினாள். ஆனால் ஜெகுவோ மறுத்து விட்டான். ''என் நிழலே படவேண்டாம் நார்யாணு. அவர்கள் தனியே போகட்டும்'' என்றான்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ அழைத்துக் கொண்டு போ, ஜெகு'' என்றான் நாணு.

''உனக்குச் சொன்னால் புரியாது.'' ஜெகு அலுத்துக் கொண்டான்.

''என்ன புரியாது?''

''நான் எந்தப் பெண்ணுடனாவது பிரயாணம் செய்தால் அதை என் நண்பர்கள் நல்ல உறவாக நினைத்ததில்லை.''

நாணுவுக்கு அவனுடைய கவலை புரிந்தது. இந்தக் கழிவிரக்கம் ஜெகுவை எவ்வளவு உயர்த்திவிட்டது! மாமா சொன்னதுபோல் இதுவல்லவோ அதிசயம்!

''எல்லோரும் எல்லாக் காலத்திலும் ஒரே மாதிரி இருப்பதில்லை, ஜெகு. உன் அம்மாவை வீட்டை விட்டு விரட்டி யடிப்பதற்கும் நீயே காரணமாக இருந்த காலம் ஒன்று உண்டு. இன்று உன் அம்மாவை நீயே இங்கு வரவழைக்கப் போகிறாய். கமலாவையும் சீதாவையும் நீதான் அழைத்துப் போக வேண்டும்'' என்றார் பத்மநாபன்.

அவனால் மறுக்க முடியாத இடத்திலிருந்து கட்டளை பிறந்து விட்டது. எனினும் கமலாவிடமே போனான். ''கமலா, நான் தனியேதான் போயாக வேண்டும். ஜெயசூரியாவும் கோபாலும் என்னுடன் வருகிறார்கள்'' என்றான்.

''வரட்டுமே... நாங்கள் அதே வண்டியில் பிரயாணம் செய்வோமே தவிர, உங்களுடன் ஒரே பெட்டியில் அல்ல'' என்றாள் அவள்.

''கமலா, நீ ஒரு வொண்டர்ஃபுல் பெண். எனக்கு இந்த யோசனை உதிக்கவே இல்லை இதுவரை. ஏன், என்றால் எதையுமே நன்றாகச் சிந்திக்கவும் முடிவதில்லை கமலா!''

''அவசரமும்படபடப்பும்தான் காரணம்!''

''ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு... கரெக்ட் கமலா. ஆனா நார்யாணன் அவசரமோ படபடப்போ படுவதில்லை. அவன் உன் டைப்...''

''எனக்கு ஒரு ஆசை கமலா.''

''என்ன?''

''நீயும் மறுப்பாயோ, என்னவோ?''

''ஆசை இன்னதென்று தெரிந்தாலல்லவா மறுப்பதோ, ஏற்பதோ எல்லாம்?''

''அதாவது... உனக்கு அது தெரிந்திருக்கும். அதாவது...''

அவனுடைய குழறலையும் இணறலையும் கண்ட கமலாவுக்கு உள்ளூற நாணமும் பயமும் எழுந்து விட்டன, என்ன சொல்லப் போகிறானோ என்று.

''அதாவது... நீ கல்யாணம் செய்துகொள்ளேன் கமலா...''

கமலா திகைப்புடன், ''ஜெகு!'' என்றாள்.

''பயப்பட்டு விட்டாயா? கல்யாணம் என்பது எனக்குத்தான் அபாயமான காரியம். உனக்கென்ன? நாணுவும் நீயும் ஒரே டைப். இந்த ஜோடியை மணையில் பார்த்தால்...''

''ஜெகு, தயவு செய்து இங்கிருந்து போகலாம்.''

''கமலா!''

''நானே போகிறேன்...'' அவள் போய் விட்டாள்.

''க....ம....லா!'' ஜெகு குழறினான்.

அவள் நின்றால்தானே? ஜெகுவுக்குச் சிரிப்பும் வந்தது; கோபமும் வந்தது. கல்யாணம் செய்து கொள்வதற்கு இந்த இரண்டு கிறுக்குகளுக்கும் என்ன தடை? இனிப்புப் பண்டம் சாப்பிட வாய் வலிக்குமோ? அவன் என்னடாவென்றால் சுடச்சுடப் பார்க்கிறான். இவளோ ஓடுகிறாள். இருக்கட்டும். இவர்களை ஜெகு விட்டுவிடுவானா இலேசில்?

தன் போக்கில் உத்தமமான ஓர் ஆசையின் பெருமிதத்தில் ஜெகு வளைய வந்தானே தவிர, அந்த வீட்டில் அவன் நிகழ்த்தி விட்ட அற்புதங்களைப் பற்றியும் விதைத்துவிட்ட ஆசைகள் பற்றியும் ஜெகு அறியான். அவை பத்மநாபன் தொடங்கி, நாணு ஈறாகப் பரவியிருந்தன. வெகுளியான ஜெகுவுக்கு அவை எவ்வாறு புலனாகும்? (தொடரும்)

# முடியேற்று விழா

பரதன்

ஸ்ஜான் ஸோமப்பாவின் கை தேர்ந்த கத்திரிக்கத்தியின் கீழ் முடி துறந்த மானிடர் எண்ணிறந்தவர்; ஆயினும் அவர்களில் ஒருவராவது ஸோமப்பாவிடம் துவேஷம் காட்டவில்லை. அதற்கு நேர்மாறாக, அவர்கள் கசாப்புக் கடைக்குப் போகும் ஆடுகள் போல் ஸோமப்பா ஸலூனுக்கே மீண்டும் மீண்டும் போய்த் தலை வணங்கி, முடியிழந்து, மகிழ்ந்து வாழ்ந்தனர். ஸோமப்பாவின் கைராசி அது. வளரா முடிகளை வளர்த்து இறக்கியது. நாளடைவில் ஸோமப்பாவின் ஸலூனில் வாடிக்கை முடிகள் வளர வளர, தினசரி முடிக்கூளமும், மூட்டை மூட்டையாகக் குவிந்தது. திடீரென்று ஒரு நாள் ஸோமப்பா சமூகத்தை நாடி ஒரு ஹாட்டு பூட்டு தரித்த பெரிய மனிதர் வந்தார். வழக்கம்போல் ஸோமப்பா மிக நைச்சியமாக அவரை, ''வாங்க, வாங்க ஸார்! உக்காருங்க!'' என்று வரவேற்று, மின்சார விசிறி இல்லாத குளிர் நிலை கொண்ட 'ஏர் கண்டிஷன்' ஸலூனில் ஒரு நல்ல மெத்தை தைத்த ஆசனத்தில் அமரச் செய்தான். அமர்ந்ததும் அவரது ஹாட்டைக் கையில் வாங்கி அதற்கென ஏற்பட்ட ஆப்பு ஒன்றில் மாட்டச் சித்தமாகக் காத்துக் கொண்டிருந்தான். வந்த மனிதர் கோட்டைக் கூடக் கழற்றாமல், மெல்ல ஹாட்டை மட்டும் சிரசை விட்டுக் கழற்றினார். ஹாட்டைக் கையில் வாங்கிக் கொண்ட ஸோமப்பா பிரமித்து நின்றான். தன் எதிரே காட்சியளித்த அந்தப் பளபளத்த, கவிழ்த்து வைத்த வெண்கலப் பானை போல், பாலைவனமாக இருந்த தலைக் கோளத்தைக் கண்டு ஸோமப்பாவின் மூச்சு ஒரு கணம் நின்றது. பிறகு தனக்கே உரிய தொழில் பாணியில் சமாளித்துக் கொண்டு, ''க்ராப்புங்களா? ஷேவுங்களா?'' என்று வினயத்துடன் கேட்டான்.



''ஓ, யெஸ்! ஸ்னிநிங்!'' என்றார் பெரியவர். தமது முகவாய்க்கட்டை ஸோப்பு நுரையில் மறைந்ததும் பெரியவர் விஷயத்துக்கு வந்தார்.

''நீதானே அப்பா, இந்த ஸலூன் முதலாளி?''.... என்றார். ஸோமப்பா திடுக்கிட்டான்.

யாராவது கார்ப்பொரேஷன் சுகாதார அதிகாரியோ ? ஒருவேளை, நம் ஸலூனில் கத்தி கத்திரியாதி ஆயுதங்களையும், ஸலூன் அறையையும் ஏன் மற்ற முடியிறக்கு நிலையங்களைவிடச் சுத்தமாக வைத்திருக்கிறாய் என்று சண்டைக்கு வருவாரோ என்று அஞ்சினான்.

''ஆமாங்க, நம்மதுதான் இந்த ஸலூன்!'' என்றதும் பெரியவர் பெருமூச்சு விட்டு ஒரு ஸோப் நுரைக் கவளை மூக்கு வட்டாரத்திலிருந்து ஏவினார். ஸோமப்பாவின் குறுவிழிகள் அக் கவளை வீச்சிலிருந்து தப்பின.

''நம்மதுதானே இந்த ஸலூன்! அப்படிச் சொல்லு!'' என்று பெரியவர் ஆமோதித்து, மேலும் தொடர்ந்தார்.

''நானே அதைக் கேட்கத்தான் வந்தேன். உன்னிடம் தலை நீட்டுவதற்குள் நீயே என்னையும் உன் வியாபாரத்தில் சேர்த்துக் கொண்டு 'நம்மதுதான் ஸலூன்' என்று எப்படியோ என் எண்ணமறிந்து சொல்லி விட்டாய்! சபாஷ்! பிழைக்கத் தெரிந்தவன்.....'' என்றார்.

''பெரியவங்க ஆசீர்வாதங்க! நீங்க சொல்றது விளங்கலிங்க....'' என்று தயங்கினான் ஸோமப்பா.

ஒரு கன்னத்தை மழுமழுவென்று வழித்து விட்டிருந்தான்.

''உன் பேர் என்ன?'' என்றார் பெரியவர். இவர் கிரிமினல் லாயராக இருக்க வேண்டும் என்று ஊகித்தான் ஸோமப்பா.

''ஸோமப்பா....'' என்று அறிமுகப் படுத்திக் கொண்டான்.

''குட்.... எக்ஸலண்ட்.... வெரிகுட் நேம். ஸோமப்பா.... வொண்டர்புல்.... நம்ம பிஸினஸுக்கு எடுத்த பேரு....''

''ஹி... ஹி... நீங்க ஒண்ணு....'' என்றான் ஸோமப்பா.

''நாம ரெண்டுன்னு சொல்லு ஸோம்ஸ்!'' என்றார் பெரியவர். பிறகு, ''சரி, விஷயத்துக்கு வரேன். இப்ப ஒவ்வொரு தலையிலேயிருந்து இறக்கற முடி, சராசரி என்ன 'வெயிட்' இருக்கும்?''

''கனங்களா? முடியிறக்கினதும் இங்கே வர்றவங்க மண்டைக் கனம் நீங்கி 'லேட்டா'வினில் அடிச்சிக்கிட்டுப் போவாங்க'' என்று பெருமையுடன் கூறினான் ஸோமப்பா.

''ஸோமண்ணா! ஸோமண்ணா! கேக்கற கேள்விக்கு ரைட் ஆன்ஸர் வரமாட்டேங்குதே! எஸ். எஸ். எல். ஸி. பசங்க தேவலையே! எங்கேயாவது ஓர் இடத்திலேயாவது கொஸ்சனுக்கு ஆன்ஸர் மாதிரி கொடுக்கறாங்க.... சரி.... நான் கேக்கறது, இப்ப ஒரு நாளைக்கு இங்கே இந்த ஸலூன்லே எவ்வளவு கத்திரிச்ச கேசம் சேருது...? எவ்வளவு எடை தலைக் குப்பை சேரும்....?'' என்று பாயிண்டாகப் போட்டார் பெரியவர்.

''அதெப்படி சொல்ல முடியுங்க? நான் எடையா போடறேன்! குப்பை சேரச் சேரப் பெருக்கித் தள்ளிடறேன், குப்பைத் தொட்டியிலே !''

''ஸோம்! நீ ஒரு பெரிய முட்டாள் ! எக்ஸ்யூஸ் மீ! ஆமாம், யு ஆர் எ ஃபூல் ! உன் தொழில்லே நீ எக்ஸ்பர்ட்... ஆனா பிஸினஸ் தெரியாதவன் நீ.... இப்ப இந்த ஹேருக்கு என்ன டிமாண்ட் தெரியுமா, உனக்கு? அத்தனையும் பவுன் ஸோம்ஜி ! டாலர் கரும் பொன்!'' என்றார் பெரியவர்.

''விளங்கலீங்களே!'' என்று ஸோமப்பா அவர் முகவரைக் கட்டைக்குப் பவுடரைப் போட்டுப் பாலீஷ் கொடுத்துத் தட்டி, உதறி, சுழல் நாற்காலியைத் திருப்பினான்.

பிறகு பெரியவருக்கும் ஸோமப்பாவுக்கும் நடந்த சம்பாஷணையையும், ரகசியப் பேச்சு வார்த்தைகளையும், விவரித்துக் கொண்டு போனால் பெரியவர் முகத்தில் காடே வளர்ந்து விடும். ஆகவே, சுருங்கச் சொல்லிக் கதையின் முதல் பூர்வாங்க அத்தியாயத்தை—அவதாரிகையை — முடிப்போம். அதிகம் வளர்ப்பானேன்? அன்று மாலையே ஸோமப்பாவுக்கும், ரிஷிகேசுக்கும் (இரண்டாவது வரும் பெயர் பெரியவருடையது) கூட்டுத் தொழில் ஒப்பந்தமாயிற்று. அதில் முக்கிய ஷரத்துப் பிரகாரம் ஸோமப்பா வெட்டித் தள்ளும் ரோமக்கூளத்தை ரிஷிகேச் பத்திரமாகச் சேகரித்து மூட்டை கட்டிக் கொண்டு போக வேண்டியது. அதற்கு அவர் கிலோ ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் ஸோமப்பாவுக்குக் கொடுக்க வேண்டியது.... இப்படி ஸோமப்பாவுக்கும் ரிஷிகேசுக்கும், கேச பாசம் ஏற்பட்டுக் கூட்டு ஒப்பந்தம் ஏற்பட்டது. ஸோமப்பா ஸலூன் வியாபாரம் வலுக்க வலுக்க, ரிஷிகேசின் ரோம ஏற்றுமதி வர்த்தகம் பெருக ஆரம்பித்தது. விரைவில் ரிஷிகேச், ஸோமப்பா ஸலூனிலிருந்து திருவேங்கடமலையான், பழநியாண்டவன் முதலிய குன்றில் குடிகொண்டுள்ள தெய்வங்கள் வழிபாட்டில் ஈடுபட்டார். அதாவது அந்த க்ஷேத்திரங்களுக்கு அடிக்கடி யாத்திரை போய் வந்தார்; பிரார்த்தனை செலுத்த அல்ல; என்றோ துறந்து பட்டுப் போன தமது முடியைக் காணிக்கை செலுத்த வல்ல, ஆங்காங்கு திவ்விய க்ஷேத்திரங்களில் இறக்கும் முடிகளை மூட்டை கட்டிச் சேகரித்துக் கப்பலேற்றி வந்தார். இதனால் நம் நாட்டின் அந்நியச் செலாவணி ஓரளவுக்கு வலுவடைந்தது. முடி கட்டுக் கரியாக்க முடியாமல் இருக்கலாம்; ஆனால் முடி திரட்டிப் பணம் திரட்டும் வழியை ரிஷிகேச் கண்டு பிடித்து வெற்றியுடன் கையாண்டார் ; அவருக்கு உறுதுணையாக, மெய்க்காப்பாளராக, கத்தியும் கையுமாக ஸோமப்பா நின்றார். ஸோமப்பா ஸலூன், வடவேங்கடம் முதல் தென்குமரி வரையில் எங்கும் பரவிற்று.

ஆங்காங்கு ''ஸோமப்பா ஹேர் டிரெஸ்ஸர்ஸ்'' என்ற விளம்பரப் பலகைகளும், நியான் அடையாளங்களும் கண்ணைப் பறித்தன; தலையை மொட்டையடித்தன..... ரோமங்கள் மலை மலையாகக் குவிந்தன. வியாபாரம் பெருகிற்று. ஸோமப்பா தான் எல்லா க்ஷேத்திரங்களிலும் முடியிறக்கும் பிரத்தியேகக் காண்டிராக்ட் எடுத்து, பிரார்த்தனை செய்து கொண்டு வந்த பல பக்த கோடிகளின் சிரங்களையும் கையாடி மழுங்கச் செய்து உய்வித்தார். ஸோம்கேச் கூட்டுப் பெயர் நாடெங்கும், உலகமெல்லாம் கொடி கட்டி, முடிவெட்டிப் பறந்தது! நாளடைவில் அவர்கள் வியாபாரம் உலகப் பிரசித்தி பெற்றதாக விளங்கியது. ரிஷிகேச் வருஷத்தில் பதினொரு மாதங்கள் உலக நாடுகளில் சஞ்சாரம் செய்துகொண்டு நமது அந்நியச் செலாவணி மதிப்பை உயர்த்தினார். ஸோமப்பா உள்நாட்டில் நமது தலைபுராண மகிமையை ஓங்கச் செய்தார்.

இந்தச் சமயத்தில்தான் அரசாங்கத் தொழில் நிபுணர் கண்ணில் ஸோம்—கேச் ஸ்தாபனம் பட்டது. இந்த நிறுவனம் கோடி கோடியாக, ''கரும் பொன்'' எடுப்பதைக் கண்டு அந்த அதிகாரி வெதும்பினார். மெல்ல அமைச்சர் காதில் ஓதினார் ; அமைச்சர் நிதியமைச்சர் காதில் கசமுசுத்தார். நிதியமைச்சர் திட்டக் கமிஷன் அங்கத்தினர் காதில் போட்டு வைத்தார். பிரம்மாண்டமான திட்டங்களைத் தயாரிப்பதில் மூச்சுத் திணறிக் கொண்டிருந்த திட்டக் கமிஷன் நிபுணர் பிடரி மயிரை உலுக்கிக் கொண்டு எழுந்தார். தாடியை, தம் சொந்தத் தாடியை, வருடினார்.

''அச்சா ! பக்டோ !'' என்றார்.

ஸோமப்பா — ரிஷிகேச் கூட்டுச் சிண்டு அவர் கையில் சிக்கிற்று.

''தேசிய மயமாக்கு! தேஷனலைஸ் தி ஹேர் இண்டஸ்டிரி'' என்ற கூப்பாடு கிளம்பிற்று.

ரோம சேகரத் தொழில் அரசாங்கத்தின் வசமாயிற்று. நாட்டில் எந்தக் கோயில், எந்தக் குளம், எந்தக் குட்டை, எந்த மலை, எந்த மடுவு, எந்த ஸலூன், எந்தச் சாவடி— எந்த மூலை முடுக்கு போனாலும், ஒரு சிறு ரோமமும், சாஸ்திரத்துக்குக்கூட இல்லாமல் அரசாங்க ஹேர் கார்ப்பொரேஷன் ஸ்வீகரித்தது. ஏழுமலையானிலிருந்து குன்றக்குடியான் வரையில் முடியிறக்கும் பக்தர்களுக்கு அருள் புரிந்த தெய்வங்கள் யாவரும் தங்கள் க்ஷேத்திரங்களில் முடியின் ஒரு சிறு அணுகூட இல்லாமல் போனது கண்டு ஏங்கினர். இந்த மடாவில் ஸோம்—கேச் ஸ்தாபனமும் விழுந்தது. ஆனால் ஸோமப்பாவின் அநுபவமும் ரிஷிகேசின் திறமையும் வீண் போகவில்லை. அரசாங்க ஹேர் கார்ப்பொரேஷனில் அவர்கள் டைரக்டர்கள்.

ஒரு தொழிலை அரசாங்கம் எடுத்துக்கொண்டால் எவ்வளவு திறம்படச் செய்ய முடியும் என்பதற்கு அரசாங்க ஹேர் கார்ப்பொரேஷன் சான்று.

''இண்டர் நாஷனல் ஹேர் புரோஸஸிங் அண்ட் விக் மானுபாக்சரிங் கார்ப்பொரேஷன்'' என்ற ஸ்தாபனமும் நிறுவப்பட்டது. பிரம்மாண்டமான தொழிற்சாலை ஒன்று நிர்மாணமாயிற்று. ஆயிரம் ஏக்கரா நிலப் பரப்பில், நூற்றுக்கணக்கான குழாய்கள், புகையைக் கக்க, புகோடபாக்கியாவிலிருந்தும், ஜப்பானிலிருந்தும், ருஷ்யாவிலிருந்தும் பல முன்னேறிய மேல்நாடுகளிலிருந்தும் பல கோடி ரூபாய் மதிப்புள்ள தொழில் நுட்ப இயந்திரசாதனங்கள் இயங்க, விஞ்ஞான முறையில் ரோமப் பதனிடும் கருவிகளும், ரோம சம்ரக்ஷண ரஸாயனங்களும், கேசாபிவிருத்திக் கலையும், செழித்தோங்க ஆரம்பித்தன. சிறு தொழில் நிறுவனங்களுக்கும் இதில் பங்கு வேண்டும் என்பதற்காக

## பாவம் நோயாளி!

நம்முடைய ரயில் மந்திரி திரு எஸ். கே. பாட்டில், ரூபாயின் மதிப்புக் குறைக்கப்பட்டதற்கு ஒரு பொருத்தமான உதாரணத்தைச் சொல்லியிருக்கிறார். ''ஒன்றுமில்லை. ஒரு நோயாளி இருக்கிறான். அவனுக்கு ரணசிகிச்சை செய்கிறோமல்லவா? அதைப் போலத்தான் இதுவும். இந்தியப் பொருளாதாரம் சற்று நோயுற்று இருந்து வந்தது. இதைக் குணப்படுத்துவதற்குப் பல வழிகளைக் கையாண்டு பார்த்தார்கள். ஆனால் அவை சக்தி வாய்ந்தனவாக இல்லை. ஆகவே ரணசிகிச்சை செய்ய வேண்டியதாயிற்று.''

நல்லது; ரணசிகிச்சை செய்யப் பட்டது. நோயாளியின் கதி என்னவாயிற்று?



இது சம்பந்தமாக, ஒரு வாரத்துக்கு முன்பு நிகழ்ந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது.

இரண்டு பேர் தெருவில் பேசிக் கொண்டு போனார்கள். ''அண்ணே, என்ன இது! இரண்டுநாள் விடுமுறை விட்டிருக்கிறார்கள். யாராவது பெரிய தலைவர்கள் இறந்தால் கூட ஒரு நாள் தானே விடுமுறை விடுவது வழக்கம். இப்போது யார் செத்துப் போனார்கள்?'' என்று கேட்டான் ஒருவன்.

''உனக்குத் தெரியாதா? நம்ம ரூபாய் செத்துப் போச்சு, தம்பீ!'' என்றான் மற்றவன்.

ரணசிகிச்சை வெற்றிகரமாகத் தான் நடந்திருக்கிறது. ஆனால் நோயாளி தான் செத்துப் போனான் போலும், பாவம்!

எழுதியவர்: 'சாணு'

நாட்டில் ஆங்காங்கு மூடி பதனிடும் சிறு சாலைகளும், டோபா உற்பத்தி சிறு ஆலைகளும் சில கோடி ரூபாய்ச் செலவில் நிறுவப்பட்டன. இவற்றுக்குப் பல நாடுகளிலிருந்து நிபுணர்கள் வந்து, ''கொலாபரேஷன்'' செய்து தங்கள் தொழில் நுட்ப முறைகளைக் கையாண்டனர். இத்தொழிற்சாலைகளுக்கு இயற்கையாகக் கிடைக்கும் மூலப் பொருள் போதாததால் திட்டக் கமிஷன் ஒரு முடி வளர்ச்சித் திட்டம் வகுக்கவேண்டி வந்தது... அதன்படி தற்போதுள்ள முடி உற்பத்தியை மூன்று மடங்கு பெருக்குவதற்காக ரோம பராமரிப்புப் பண்ணைகள் நிறுவப்பட்டன.

இப்படி ஓங்கி வளர்ந்து வருகிற ரோமத் தொழிலுக்கு ஒரு தனி மந்திராலயம் வேண்டாமா? தனி மந்திரி, துணை மந்திரி, உப மந்திரி முதலிய மரியாதைகள் வேண்டாமா? நாளடைவில் அவைகளும் தோன்றக் கூடும்.

டெல்லியில் இப்போது ஒவ்வொரு தொழிலுக்கும் மந்திராலயத்துக்கும் ஒரு பத்தடுக்கு 'பவனங்கள்' வானைப் பிளந்து நிற்கின்றன. சீக்கிரத்தில் ''கேசபவன்'' இவற்றுக்கு மேல் தலைதூக்கி நிற்கும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கலாம். முடியேற்று விழாவுக்கு ஸோமப்பாவை விடத் தகுதியுள்ளவர் வேறு யார்?



# ஊர் வம்பு

★ சிரமமில்லாத க்ஷேத்ராடனம்

★ வறுமையின் கொடுமை

★ வரிக் கிலி

★ நீரில் நடந்தார்!

க்ஷேத்ராடனம் கிளம்புவதற்குமுன் பண வசதி இருக்கிறதா என்று பார்க்க வேண்டிய நாள் இது. அப்படி இருக்கையில் திருப்பதி முதல் தில்லைவரை உள்ள ஸ்தலங்களை ஒரே இடத்தில் வைத்துப் பார்த்துவிட முடிந்தால் வசதிதானே? இந்தச் சகாயம் செய்து கொடுத்தார் எம். கே. ரங்கசாமி அய்யங்கார். மியூஸியம் தியேட்டருக்குப் பின்னால் புதிய கட்டடத்தில் அவரது புகைப்படக் கண்காட்சி சமீபத்தில் சுகாதார மந்திரி ஜோதி வெங்கடாசலத்தினால் திறந்து வைக்கப்பட்டது. அறநிலையப் பாதுகாப்பு மந்திரி (முதல் மந்திரி) வருவதாக இருந்து வர இயலவில்லை. அவர் வந்திருந்தால் பேச்சு வேறு விதமாய் இருந்திருக்கும். ஆனால் சுகாதார மந்திரி வந்ததும் சொற்பொழிவுகள் இயல்பாகக் கோயில்களில் அந்நாட்களில் நடந்த வைத்தியப் பணி பற்றித் திசை திரும்பி விட்டன!

புகைப்படக் கண்காட்சியில் நாம் ஏற்கனவே பார்த்துள்ள ஸ்தலங்களைக்கூடக் 'காமிராக் கண்' கொண்டு புதிய கோணங்களில் காண்கிறோம், புதுமையை உணருகிறோம். புனிதத்துவத்தைப் பெறுகிறோம்.

ஃ ஃ ஃ

ஹிட்லர் ஆட்சியில் யூதர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் நினைவுக்கு வருகின்றன. குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தின் கீழ் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள ஆட்களை வலைபோட்டுப் பிடிக்கிறார்கள் கங்காணிகள். அறுவைச் சிகிச்சைக்கு உட்படுவோருக்குப் பணம் உண்டு. அதில் கங்காணிகள் பங்கு கேட்பார்கள். பணத்துக்காகத் தங்கள் தேகத்தையே கெடுத்துக் கொள்ளும் பரிதாப நிலையை இந்நாட்டில் தவிர வேறெங்கும் காண முடியாது! அறுவைச் சிகிச்சை செய்தபின் அவர்களைக் கவனிப்பார் கிடையாது. ரணம் சரிவர ஆறாமல் சீழ் பிடித்து அவர்கள் ஆரோக்கியமே கெட்டுவிடுகிறது பலப் பல சந்தர்ப்பங்களில். இதெல்லாவற்றையும் விடக் கொடுமை கல்யாணமாகாதவர்கள் கூடக் காசுக்காக இந்த அறுவைச் சிகிச்சைக்கு உட்படுகிறார்கள். விலைவாசி ஏற்றமும் ரூபாயின் மதிப்பின்மையும் இந்தப் பாழும் நிலைக்கு நம்மை இட்டுச் சென்று கொண்டிருக்கின்றன.

ஃ ஃ ஃ

தஞ்சை ஜில்லாவில் கிராமந்தோறும் உபாத்தியாயர்களை அனுப்பி ஆடுமாடுகளைக் கணக்கிடச் சொன்னார்களாம். ஜனசங்கியைக் கணக்கெடுப்புப் போலத்தான். விவசாயிகள் தங்களிடமுள்ள ஆடு மாடுகள் பற்றிய கணக்கு விவரங்களைத் தர மறுத்து விட்டார்கள். ஏன் தெரியுமா? விவரங்களை அறிந்தால் காங்கிரஸ் அரசாங்கம் ஆடுமாடுகளுக்கும் வரி போட்டுவிடும் என்ற பயம்! நமது விவசாயிகள் எத்தனை கெட்டிக்காரர்கள் என்பதற்கு இதைவிட வேறென்ன அத்தாட்சி தேவை!

ஃ ஃ ஃ

தண்ணீர் மேல் நடக்கப் போவதாகக் கூறிய ஒரு ஹடயோகி, கூடியிருந்த நூற்றுக் கணக்கான பத்திரிகையாளர்களையும், பிற பார்வையாளர்களையும் ஏமாற்றி விட்டார். 'தொபுகடீ'ரென்று நீரில் அமுங்கியே விட்டார். ஹடயோகி மேல் கோபப்படுவதற்கில்லை. ஒரு மாயைத் தோற்றமான 'சோஷலிஸப்' பாதையின் மேல் நடந்து சென்று இந்நாட்டில் செல்வம் கொழிக்கச் செய்யப் போவதாகக் கூறிவிட்டு நமது காங்கிரஸ் சர்க்கார் கடன் வெள்ளத்தில் மூழ்கிக் கரை யேற முடியாமல் தவிக்கவில்லையா, என்ன?


VICCO TURMER
VANISHING CRE

# அனலிடை இருவர்

முதன் முதலாக ஆணையும் பெண்ணையும் உலகில் தோற்றுவித்தபோதே கடவுள் ஆணுக்குச் சிந்தனை சக்தியையும் பெண்ணுக்கு இருதயத்தின் உணர்ச்சியையும் சற்று அதிகமாக வைத்துப் படைத்துவிட்டான் போலும். உலகம் தோன்றிய நாள் முதல் இன்று வரையிலும் இந்தப் படைப்பின் போக்கில் எவ்வகையான மாறுதல்களும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

விசுவநாதன் லட்சுமியின் புற அழகினால் மட்டும் அவளிடம் ஈர்க்கப்படவில்லை; அவளுடைய அகத்தின் அழகும் அறிவின் அழகும் அவனை எப்போதோ ஆட்கொண்டு விட்டன. ஆனாலும் சில சமயங்களில் அவள் ஏனோ அவனுக்கு மற்ற விஜயநகரத்துப் பெண்களைப் போலவே காட்சியளித்தாள்.

"பாண்டிய நாட்டுக்கு நீங்கள் இப்போது போகக் கூடாது; போகவே கூடாது!" என்று அவள் அடம் பிடித்ததைத்தான் அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவள் அமைச்சரின் புதல்வி; கல்வி கேள்விகளில் தேர்ச்சியுற்றவள்; அரசியல் அறிவும் அவளுக்கு இருந்தது. எனினும் அவள் விசுவநாதனிடம் சின்னஞ்சிறுகுழந்தை போல் நடந்து கொண்டாள்.

அளவுக்கு மீறிய பொறுமையைக் கடைப் பிடித்து அவளிடம் விவரங்களை எடுத்துக் கூறினான் விசுவநாதன். சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் அவனுக்கு இட்ட கடைசிக் கட்டளை அது. அதை அவனால் மறுக்க முடியாது. மேலும் அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த அச்சுதராயரும் அவனைப் புறப்படச் சொல்லி விட்டார்.

"புதிய சக்கரவர்த்திகள் மட்டும் இதைச் சொல்லவில்லை; உன் அப்பாவும் வலியுறுத்தியிருக்கிறார்கள். சபையில் பலர் இந்த முடிவை மாற்றுவதற்காக எவ்வளவோ முயற்சி செய்தார்கள். என்றாலும் உன் அப்பாவே அனைவருக்கும் மறுமொழி கூறி இதற்கு இசையச் செய்திருக்கிறார்கள். நான் புறப்படுவதைத் தவிர வேறு வழியில்லை" என்றான் விசுவநாதன்.

"அப்பாவின் ஆணை என்பதால்தான் இதிலிருந்து எப்படியாவது மீளும்படி கேட்டுக் கொள்கிறேன்!" என்றாள் லட்சுமி.

சட்டென்று விசுவநாதன் அவள் விழிகளைக் கூர்ந்து நோக்கினான். அவளுடைய இதயத்தின் ஆழத்தில் பதுங்கிக் கொண்டு துடிதுடிக்கும் ஏதோ ஒரு ரகசியத்தைக் கண்டு பிடிக்க விரும்பியவன்போல் அவன் நோக்கினான்.

"நான் சொல்வதைக் கேள். பாண்டிய நாட்டிலும் அதைச் சுற்றிலும் கலவரங்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பதாக முன்பே நமக்குச் செய்திகள் வந்து விட்டன. அந்த அதிர்ச்சியே சக்கரவர்த்திகளுக்கு எமனாக முடிந்தது. திடீரென்று அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்ததாலேயே, நாம் உடனடியாக ஏதும் செய்யவில்லை. இனியும் காலம் கடத்தாமல் நான் படைகளோடு புறப்பட வேண்டும். இல்லா விட்டால்.... இல்லா விட்டால்.... தமிழ் நாட்டையே நாம் இழக்க வேண்டிய நிலை வந்துவிடும்."

"நீங்கள் கூறுவதெல்லாம் எனக்கு விளங்குகிறது. அதே போல் நான் படும் துன்பத்தையும் நீங்கள் சற்றே புரிந்து கொள்ளுங்கள்."

"துன்பத்துக்கு என்ன காரணம்?" என்று நேரடியாகக் கேட்டான் விசுவநாதன்.

"நீங்கள் தமிழ்நாட்டையே இழக்க வேண்டியிருக்கும் என்று அஞ்சுகிறீர்கள். நானோ உங்களையே இழந்து விடுவேன் போலிருக்கிறது. நினைப்பதற்கே நடுங்கிக் கொண்டிருந்த ஓர் அவச் சொல்லை என் வாயாலேயே கூறிவிட்டேன். என்னால் தாங்க முடியவில்லை; தாங்கவே



முடியவில்லை!'' தாங்கிக் கொள்ள முடியாமல் அவள் தேம்பித் தேம்பி அழுதாள்.

அந்த மாளிகையிலேயே விசுவநாதனை மிகவும் கவர்ந்த இடங்கள் இரண்டு. லட்சுமியின் மேல்மாடக் கூடமும் தோட்டத்துப் புதர்களுக்கப்பாலிருந்த மரத்தடியும் தான் அவை. தோட்டத்தைவிட அந்தக் கூடத்தில்தான் தனிமை மிகுதியாக ஆட்சி செலுத்தியதென்று கூறலாம். பெரும்பாலும் லட்சுமி தன் பணிப் பெண்களைக் கூட அதற்குள் அழைப்பதில்லை. அவர்கள் இருவரும் அப்போது அந்தக் கூடத்தில் தான் இருந்தார்கள்.

அவனுடைய மனத்துக்கு அமைதியும் மகிழ்ச்சியும் அளித்து வந்த இடம் அது. லட்சுமியோ அவன் மனத்துக்கு மகிழ்ச்சியும் எழுச்சியும் அளித்து வந்தவள். அவள் சொல்ல முடியாமல் தவித்துவிட்டுப் பிறகு கூறிய சொல் அவனைத் திடுக்கிட வைத்தது. தாங்க முடியவில்லை என்று கூறி அவள் வாய் விட்டுப் புலம்பினாள் என்றாலும், அவனும் தான் அவளோடு ஒன்றாக அப்போது மௌனமாகப் புலம்பினான்.

''அப்படியே கலவரங்களை அடக்க வேண்டுமென்றாலும் உங்களை விட்டால் வேறு யாருமே இந்த விஜயநகரத்தில் இல்லையா ? எப்படியாவது நீங்கள் வேறு யாரையேனும் இதற்கு அனுப்பும்படி சொல்லுங்கள்! இன்னும் சில மாதங்களுக்காவது நீங்கள் விஜயநகரத்தை விட்டு வெளியே செல்ல வேண்டாம் !''

''லட்சுமி! இப்படி நீ அஞ்சுவதற்குரிய காரணங்கள் என்னவென்று எனக்குப் புலப்படவில்லை. தெரிந்தால் அதற்கேற்றவாறு நான் ஏதும் செய்யலாம்'' என்றான் விசுவநாதன்.

''என் அப்பாவுக்குத் திடீரென்று சேர நாட்டு உதயமார்த்தாண்டவர்மன் மீது அன்பு பிறந்திருக்கிறது. சக்கரவர்த்திகளின் மறைவை அடுத்து, அவர்கள் இருவரும் இங்கு அடிக்கடி கூடிப் பேசினார்கள். அவர்கள் என்னைப் பற்றியும் பேசியிருப்பார்கள் என்றே நான் நினைக்கிறேன். உதயமார்த்தாண்டனுடைய நோக்கிலும் பேச்சிலும் செயலிலும் சலனம் தென்படுகிறது. அப்பாவின் ஆதரவு இல்லாமல் அவன் என்னிடம் அப்படிப் பழகத் துணிந்திருக்க மாட்டான்.''

விசுவநாதனின் இதயத்தை யாரோ கசக்கிப் பிழிவது போன்ற வேதனை ஏற்பட்டது. சிறிது நேரம் அவன் தலையைக் குனிந்தவாறே மனம் குழம்பியிருந்தான்.

''நான் இங்கு இல்லாவிட்டால் உன்னுடைய விருப்பத்துக்கு எதிராக ஏதும் நடக்கக் கூடுமென்று நினைக்கிறாயா?''

''விஜயநகரத்தில் பெண்கள் எவ்வாறு நடத்தப்படுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்களுக்கென்று ஓர் எண்ணமோ ஆவலோ இருக்க இங்கு வழியிடையாது. அதிர்ஷ்டவசமாகச் சில இடங்களில் பெற்றோரின் எண்ணமும் பெண்களின் ஆவலும் ஒன்றாக இருந்து விடுகின்றன. பலர் சின்னஞ்சிறு வயதிலேயே, குழந்தைப் பருவத்திலேயே, திருமணத்தை முடித்துவிடுகிறார்கள். அப்பா இந்த அளவுக்கு என்னை வளர்த்து வந்ததே இங்கு பழக்கத்தில் இல்லாத ஒரு வழக்கம்தான். ஆகவே, அவர்களுடைய கட்டளையை மீறி அவர்களோடு தனித்து நான் போராட முடியுமா என்பதை நீங்கள் நினைத்துப் பாருங்கள்.''

நினைத்துப் பார்த்தான் விசுவநாதன். எதையுமே அவள் மிகைபடச் சொல்லவில்லை. பெண் குலத்தில் கணிகையர் மட்டிலுமே அங்கு தங்கள் போக்குப்படி வாழ முடிந்தது. குடும்பங்களில் வாழ்ந்த பெண்கள் அவர்கள் சிவிகை தூக்குவோரின் குடில்களைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, மிகுதியான கட்டுப்பாடுகளுடன் அடிமைகளைப் போலத்தான் வாழ்ந்தார்கள்.

பெண்கள் அங்கே பேணிக் காக்கப்பட்டார்கள் என்பது மெய்தான்; பெண்களில் பல தொழில்களைச் செய்வோரும் இருந்தனர் என்பது மெய்தான். போர்த் தொழில் கற்ற பெண்டிரும்கூட விஜயநகரத்தில் பலர் இருந்தார்கள். என்றாலும், அவர்கள் பேணிக் காக்கப் பெற்ற வைர மணிகளுக்கு ஒப்பாகவோ, கன்று காலிகளுக்கொப்பாகவோ, யானை குதிரைகளுக் கொப்பாகவோதான் கருதப்பட்டனர்.

அத்தகைய சூழ்நிலையில் வளர்க்கப்பெற்ற பெண்களில் லட்சுமி தனித்திருந்தாள் என்பதே விசுவநாதனை அவள்பால் பற்றுதல் கொள்ளச் செய்தது.

''நான் இங்கு இருப்பதால் மட்டிலும் என்ன நேர்ந்துவிடும்?'' என்று கேட்டான் விசுவநாதன்.

''நீங்கள் அப்பாவை அவர்கள் போக்கில் விட்டுவிட மாட்டீர்கள். நான் சேரநாட்டுக்குச் சிறையெடுக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டீர்கள். உங்களையும் உங்கள் ஆற்றலையும் எனக்கு நன்றாகத் தெரியும்.''

விசுவநாதன் சிந்தனை செய்தான்; லட்சுமி சித்தப்பிரமை கொண்டவள்போல் குமுறினாள்.

''இல்லாவிட்டால் இப்போதே என்னைத் திருமணம் செய்து கொண்டு விடுங்கள். சக்கரவர்த்திகள் நம் திருமணத்தை நடத்தி வைப்பார் என்றே நம்பியிருந்தேன். அவர்களும் நம்மை ஏமாற்றி விட்டுப் போய்விட்டார்கள். அவர்கள் ஆணையிட்டால் அப்பா தட்டமாட்டார்கள் என்று நான் நம்பியிருந்ததும் வீணாகி விட்டது. இப்போதே என்னைத் திருமணம் செய்து கொள்ளுங்கள். திருமணம் செய்து கொண்டு பிறகு நீங்கள் பாண்டிய நாட்டுக்குப் புறப்படுங்கள்!''

விசுவநாதன் திடுக்கிட்டான். சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் இறந்த துக்கத்திலிருந்து இன்னும் விஜயநகரம் மீளவில்லை. நகரத்தின் ஒவ்வொரு வீடுமே துக்கம் அநுஷ்டித்துக் கொண்டிருந்தது. அதை

பெல்லாம் நன்கு அறிந்திருந்த லட்சுமியா இப்படிப் பேசுகிறாள்? சித்தம் கலங்கி விட்டதா லட்சுமிக்கு?

லட்சுமி மெல்ல அவனருகில் நெருங்கி வந்தாள். அவன் மடியில் தலையைக் கிடத்திக் கொண்டு, ''முடியாது; என்னால் உங்களை இழந்துவிட முடியாது! இப்போதே என்னைத் திருமணம் செய்து கொள்ளுங்கள்!'' என்று மன்றாடினாள்.

அந்த அறை முழுவதும் குபீரெனப் பற்றி எரிவது போலவும், அந்த அனலுக்குள் அகப்பட்டு இருவரும் பாகாய் உருகிக் கரைவது போலவும் தோன்றியது விசுவநாதனுக்கு. காடுபோல் மண்டிக் கிடந்த அவள் கருங்கூந்தலை மெல்ல வருடியவாறே, ''லட்சுமி! நான் புறப்படுவதற்கு முன்பு ஓர் ஏற்பாடு செய்துவிட்டுப் புறப்படுகிறேன்; கலங்காதே!'' என்று உறுதி கூறினான்.

## மூன்றாம் அத்தியாயம்

# திருமணப் பேச்சு

விசுவநாதன் ஏற்பாடு செய்ய வேண்டிய அவசியமே இல்லாமல் போய்விட்டது. நாகமநாயக்கரும் கமலாதேவியும் அப்போது விசுவநாதனின் திருமணம் குறித்தே ஆலோசித்துக் கொண்டிருந்தனர்.

அம்முறை பாண்டிய நாட்டுக்குச் செல்லும் விசுவநாதன் திரும்பி வருவதற்கு ஓரிரண்டு ஆண்டுகள் ஆகக் கூடும் என்றார் நாகமநாயக்கர். அங்கே அவனுக்கிருந்த கடமைகளைக் கமலாதேவியாரிடம் கூறினார். அதோடு சாளுவநரசிம்மரின் போக்கில் காணப்பட்ட மாறுதல்களும் தமக்குச் சஞ்சலம் தருகின்றன என்றார்.

''பெரிய சக்கரவர்த்திகள் இறந்துவிட்டதால் இனி எப்படி நடக்குமென்று தெரியாது. இப்போதைக்குப் பெயரளவுக்கு அச்சுதராயரின் ஆட்சி நடந்தாலும் சாளுவ நரசிம்மரே சக்கரவர்த்தியாக இருக்கிறார். ஆனால் இதுவும் நெடுநாள் நிலைக்காது. பெரிய சக்கரவர்த்திகளின் மருமகன் ராமராயர் இவரை இவர்போக்கில் விட்டுவிட மாட்டார்!'' என்றார் நாகமநாயக்கர்.

''உங்களுக்கும் உங்கள் குமாரனுக்கும் அரசாங்க விஷயங்களைத் தவிர வேறெதிலும் நினைவு இருப்பதில்லை. நான் இப்போது நம்முடைய குமாரனின் திருமணம் பற்றிப் பேசுகிறேன்!'' என்றார் கமலாதேவி.

''திருமணத்துக்கும் அரசாங்க விஷயங்களுக்கும் சம்பந்தம் இருக்கிறது. லட்சுமியை நீயும் நானும் இதுவரையில் நம்முடைய மாளிகைக்கு வரப் போகும் மருமகள் என்றே நம்பிக் கொண்டிருந்தோம். விசுவநாதனும் லட்சுமியும் அப்படியே ஒருவர் மீது ஒருவர் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இது விஷயத்தில் சாளுவ நரசிம்மரின் மனம் மாறியிருக்குமோ என்ற சந்தேகம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.''

''சந்தேகத்துக்கே இடமில்லாமல் முறைப்படி பெண்ணை நாம் நிச்சயம் செய்துவிட்டால் போகிறது. இந்தச் சமயத்தில் திருமணம் செய்தால் அவ்வளவு நன்றாக இருக்காது. அதனால் நேரில் பேசி நிச்சயம் செய்து கொள்வோம்.''

விசுவநாதன் மதுரைக்குப் புறப்படுவதற்கு முன்னால் நிச்சயம் செய்யும் விழாவை வைத்துக் கொள்வதென்று நாகமரும் கமலாதேவியும் முடிவுக்கு வந்தார்கள். அதற்கு முன்பாக ஒரு நாள் பார்த்து, அது பற்றிப் பேசுவதற்காக அவர்கள் இருவருமே சாளுவரின் மாளிகைக்குப் புறப்பட்டார்கள்.

சாளுவ நரசிம்மர் வந்திருப்பவர்களின் நோக்கத்தைப் புரிந்து கொள்ளாதவர் போல் மிகவும் உற்சாகமாக அவர்களை வரவேற்றார். கமலாதேவியை அவர் தம் மனைவியிடம் அனுப்பிவிட்டு, நாகமநாயக்கரிடம் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினார். நாகமநாயக்கரைப் பேச விடாமல், அவரே அரசியல் விஷயங்களில் பேச்சைத் திருப்பினார்.

''நானே இனி விஜயநகரத்தின் அமைச்சர் பதவியைப் பற்றிக் கொண்டிருக்கப் போவதில்லை. சோழ நாட்டுக்கே போய்விடலாமா என்று பார்க்கிறேன்'' என்றார் சாளுவர்.

நாகமநாயக்கர் இதைக் கேட்டுத் திடுக்கிடவில்லை. சாளுவரின் அதிகார வெறி அவருக்கு அமரநாயக்கர்களின் பகையைத் தேடிக் கொடுத்து விட்டது என்பதை அறிந்துகொண்டிருந்தவர் அவர். ராமராயர் எப்படியாவது சாளுவநரசிம்மரை வெளியேற்றி விடுவது என்ற தீர்மானத்திலிருந்தார் என்பதும் அவருக்குத் தெரியும்.

''நீங்கள் ஒருவகையாக மற்றவர்களின் கருத்துக்களுக்குச் செவிசாய்த்து நடந்து கொண்டால் இந்த அவசியமே ஏற்படாது'' என்றார் நாகமர்.

''அது இனி நடக்கப் போவதில்லை; தமிழனாகிய என்னை இங்கு விட்டு வைக்க மாட்டார்கள். அதுதான் உண்மையான காரணம்'' என்றார் சாளுவநரசிம்மர்.

சாளுவநரசிம்மர் தம்மிடமிருந்த குறையை மறந்துவிட்டுப் பிறரைக் குறைகூறியது நாகமருக்கு என்னவோ போலிருந்தது. 'அதிகார வெறி உங்களிடம் அளவுக்கு மீறிவிட்டது!' என்று எங்ஙனம் நாகமரால் கூற முடியும்?

''தெலுங்கர், தமிழர், கன்னடத்தார் எல்லாருக்கும் உரிய சாம்ராஜ்யம் இது. தமிழர் என்பதால் ஒருபோதும் உங்களுக்குத் தீமை நேர்ந்து விடாது. அப்படி நேராமல் நான் கவனித்துக் கொள்வேன்'' என்றார் நாகமர்.

''சக்கரவர்த்தியாவதற்கு முன்பு அச்சுதராயருக்கு என்னை விட்டால் வேறு துணையில்லை. அவர் ஆட்சிக்கு வருவதற்கும் நான்

காரணமாக இருந்திருக்கிறேன். இதுவென்று இரண்டு நாட்களாக அவர் ராமராயர் பக்கம் சாய்ந்து விட்டார்.''

''சக்கரவர்த்திகள் உயிரோடு இருக்கும் போதே தமக்குப் பின் அவர்கள் இருவரும் ஒற்றுமையாக இருந்து நாடாள வேண்டும் என்றுதானே கூறினார்கள்? உட்பிளவு ஏற்படாமல் இருப்பதற்கு அவர்கள் வகுத்த வழி தானே இது?''

சாளுவநரசிம்மருக்குச் சிறிதும் திருப்தி ஏற்படவில்லை. ''உறவினர்கள் இருவரும் ஒன்றாகி விட்டார்கள்; நான் அந்நியன்; வெளியேறப் போகிறேன்'' என்றார்.

நாகமநாயக்கர் அதுதான் சமயமென்று தாம் வந்த விஷயத்தைச் சாளுவருக்கு நினைவூட்டினார்.

''நீங்கள் இங்கு யாருக்குமே அந்நியரல்லர்; நான்கூட இப்போது நம்முடைய உறவை வளர்த்துக் கொள்வதற்காகத்தான் உங்களைத் தேடி வந்திருக்கிறேன். விசுவநாதனுக்கு லட்சுமியைப் பெண் கேட்பதற்காக இன்று நானும் கமலாதேவியும் புறப்பட்டோம்.''

சாளுவநரசிம்மர் பதிலேதும் கூறவில்லை. யோசனையில் ஆழ்ந்தவர்போல் காணப்பட்டார். நாகமநாயக்கர் திருமணம் அப்போதே நடக்கப் போவதில்லை என்றும், ஆனால் நிச்சயம் செய்யும் விழாவை மட்டிலும் உடனடியாக நடத்திவிட வேண்டும் என்றும் கூறினார்.

''ஊரறிய நிச்சயம் செய்துவிட்டால், பிறகு விசுவநாதன் இங்கு திரும்பும் சமயத்தில் திருமணத்தை வைத்துக் கொள்ளலாம்.''

''அவன் இங்கு திரும்பும் சமயத்தில் நான் குடும்பத்தோடு தஞ்சையிலிருப்பேன். விஜயநகரத்தை விட்டுக் கிளம்புவதென்று நானே முடிவு செய்துவிட்டேன்!''

''அப்படியே நீங்கள் அங்கு சென்றாலும் தான் என்ன? திருமணத்தை எங்கு எப்போது நடத்துவது என்பதை நாம் பிறகு முடிவு செய்து கொள்வோம்.''

சாளுவநரசிம்மரின் முகம் சிறிது சிறிதாகக் கறுத்துக் கொண்டு வந்தது. அவருடைய நெற்றிப் புருவத்தில் சுருக்கம் கண்டது. வேதனையும் கோபமும் கலந்த குரலில் அவர் நாகமநாயக்கரிடம் பேசினார்.

''விசுவநாதனை நான் உங்களுடைய குமாரன் என்று பிரித்து நினைத்ததே இல்லை. ஆண்பிள்ளை இல்லாத நான் அவனையே என் பிள்ளையாகப் பாவித்து வந்தேன் என்பதும் உங்களுக்குத் தெரியும். ஆனால் அவன்தான் அதைக் கெடுத்துக் கொண்டான். என்னுடைய ஆசைகள் ஒருபுறம் இருக்கட்டும். அவனுடைய எதிர்கால வாழ்வையே அவன் கெடுத்துக் கொண்டான். என்னதான் எனக்கு அவன் மீது கோபமிருந்தாலும், இன்னும் அவனை அடியோடு நான் வெறுக்கவில்லை. என்னுடைய நெஞ்சில் அவனுக்கும் ஓர் இடம் இருக்கத்தான் செய்கிறது.''

முதன் முதலாக நாகமர் தம்முடைய நண்பரின் குரல் தழுதழுப்பதைக் கண்டார். விசுவநாதனுக்கு லட்சுமியைக் கொடுக்க அவர் மறுக்க மாட்டார் என்றே நாகமருக்குத் தோன்றியது.

''என்னையே எதிர்த்துப் போரிட்டவன் அவன். அதற்காக அவனை நான் புறக்கணித்துவிட முடியுமா?'' என்றார் நாகமர்.

''தோல்வியடைந்தவன் நான்; அது உங்கள் தோல்வியல்ல!'' என்றார் சாளுவர்; ''என் திட்டம் நிறைவேறியிருந்தால், அதற்கு விசுவநாதனே பகைவனாக இல்லாதிருந்திருந்தால், இப்போது அவனே தெற்கில் முடிசூடி ஆட்சி செய்து கொண்டிருப்பான். நீங்களும் நானும் அவனுக்குப் பின்னே இருந்து ஆட்சிச் சுமைகளை ஏற்றுக் கொண்டிருப்போம். நான் அவனுக்கு என் பெண்ணை மட்டுமா கொடுக்க விரும்பினேன்? ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே கொடுத்து லட்சுமியையும் கொடுக்க நினைத்தேன்!''

நாகமருக்கு ஏதுமே பேசத் தோன்றவில்லை. எந்த நினைவுகளை அவர் அறவே மறக்க நினைத்தாரோ, அதே நினைவுகளைத் தூண்டி விட்டு விட்டார் சாளுவநரசிம்மர்.

''சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரின் இளம் பிராயத்தில் இந்த சாம்ராஜ்யத்துக்காக எவ்வளவு தியாகங்கள் செய்திருக்கிறோம்? சக்கரவர்த்தியின் முடிவு நெருங்கி விட்டது என்று நான் முன்பே கூறவில்லையா? அவருக்குப் பிறகு இப்படியெல்லாம் நடக்கும் என்பதை நான் முன்பே எதிர்பார்த்திருந்தேன்!...இனி இந்தச் சாம்ராஜ்யம்...'' பற்களைக் கடித்தார் சாளுவநரசிம்மர்.

நாகமநாயக்கர் அவர் பேசியதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, ''நான் வந்த விஷயத்தை மறந்துவிட்டீர்களே?'' என்றார்.

''நான் அதை மறக்கவில்லை; அது ஒன்றுதான் என் நினைவிலிருக்கிறது.''

''அப்படியானால் என்றைக்கு விழாவை வைத்துக் கொள்ளலாம்?''

''தஞ்சையில் நிச்சயம் செய்யும் விழாவையும், மதுரையில் திருமணத்தையும் வைத்துக் கொள்வோம். இன்னும் நான் நம்பிக்கையை இழந்துவிடவில்லை. முதலில் நடக்க வேண்டிய செயல்கள் முதலில் நடைபெறட்டும். அடுத்து நடப்பவற்றை அடுத்துக் கவனிப்போம். விசுவநாதனுக்கு லட்சுமியை நான் திருமணம் செய்து கொடுக்கும் நாள் விரைவில் வர வேண்டும். அதுவே என் வாழ்நாளில் பொன்னாளாகும்!''

நாகமநாயக்கர் இருவேறு உணர்ச்சிகளுடன் அங்கிருந்து புறப்பட்டார். உதய மார்த்தாண்டனிடம் சாளுவர் பரிவு காட்டியதையும் அவர் ஓரளவு தெரிந்து வைத்திருந்தார். அவரால் அமைச்சரை முழுமையாக நம்பவும் முடியவில்லை; நம்பாமலிருக்கவும் முடியவில்லை.

''கவலைப்படாதீர்கள்! இனி என் திட்டம் தோல்வியுற வழியில்லை. நாம் இருவரும் இருந்தே திருமணத்தை நடத்தி வைப்போம்'' என்றார் சாளுவர்.

அவருடைய திட்டம் என்ன? எவ்வளவோ முயன்றும் நாகமரால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. (தொடரும்)

## சென்னை, அகில இந்திய ஸாய் ஸமாஜம் - வெள்ளி விழா



சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள அகில இந்திய ஸாய் ஸமாஜத்தின் வெள்ளி விழா 1966 ஜூலை 2-ம் தேதியிலிருந்து ஒரு வாரத்துக்கு கோலாகலமாகக் கொண்டாடப்படும். விழாவின் சில முக்கிய நிகழ்ச்சிகள் :

1. ஸ்ரீ ஸாயிபாபா ஆலயத்தின் முன்பு நிர்மாணிக்கப்பட்டுள்ள மண்டபம் திறந்து வைக்கப்படும்.
2. 1963-ம் ஆண்டு ஜூலையில் துவக்கப்பட்ட ஸ்ரீ ஸாயிபாபா கோடி அர்ச்சனை இவ்விழாவில் பூர்த்தியாகிறது.
3. ஸ்ரீ ஸாயிபாபா, அவருடைய வாழ்க்கை, உபதேசங்கள், லட்சியங்கள் இதர மதங்கள், சமயக் கோட்பாடுகள் ஆகியவைபற்றி அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளடங்கிய கவர்ச்சிகரமான ஒரு விசேஷ மலர் வெளியிடப்படுகிறது.

நவீனகால சமயங்கள், உலக சாதுக்கள் வரலாறுகள் முதலியவைபற்றிய கருத்தரங்கும் சமய - சமூக - தர்ம விஷயங்களைப் பிரதானமாகக் கொண்ட பல கலை நிகழ்ச்சிகளும் நடைபெற விருக்கின்றன. இவற்றில் பல பிரமுகர்கள் பங்கு கொள்ள இருக்கிறார்கள்.



பம்பாய் இந்தியன் எக்ஸ்பிரஸ் குரூப் பத்திரிகையின் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணன் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி டாக்டர் ராமன் M. B. B. S.க்கும், தூத்துக்குடி ஆடிட்டர் ஸ்ரீ சாம்பசிவய்யர் அவர்களின் புதல்வி சௌபாக்யவதி சாவித்திரிக்கும் தூத்துக்குடி டுவிபுரத்தில் சமீபத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்குப் பல பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க, மணமக்கள் !



# மலேசியா மாநாடு

சா. கணேசன் எம்.எல்.ஏ

ஏப்ரல் மாதம் 18ம் தேதி இங்கட்கிழமை. எங்கும் ஒரே பரபரப்பு. பெருமக்கள் யாவரும் திரண்டு கருத்தரங்கு மண்டபத்தை முற்றுகையிட்டு விட்டனர். எல்லோர் முகங்களிலும் இன்னதென்று கூறவொண்ணு ஒருவிதப் பொலிவு. மகிழ்வும் ஆரவாரமும் நிறைந்துள்ள உள்ளத்தை, உரைக்கு முந்திக் கொண்டு மெள்ள மெள்ள மக்களின்முகங்கள் விளம்பிக் கொண்டிருந்தன.

மண்டபம் குளிர்பதனம் செய்யப்பட்டிருந்தது. எண்கோண வட்டமான அமைப்பு. சுமார் இருநூற்றைம்பது பேர்கள் அமர்ந்திருக்கலாம். எல்லார்க்கும் நாற்காலிகளும் முன்னே சிறு மேசைகளும் தரப்பட்டிருந்தன. மேசை, நாற்காலி, தரை, சுவர் யாவும் பளபளவென்று விளங்கின. மேல்கூரை எண் முகடு கொண்டு பெரிய ஒரு வெண்கொற்றக் குடை போல விரிந்து கவிந்திருந்தது. அதன் முகடும், கூடல் வாயும், பொருந்தும் சுவர்களில் அமைந்த முக்கோணங்களிலெல்லாம் செந்தமிழர் செய்த செப்புத் திருமேனிகளின் நிழற்படங்கள் கொலு வீற்றிருந்தன. அகத்தியர், அப்பர், சம்பந்தர், மணிவாசகர், நம்மாழ்வார், கூத்தப் பிரான், கோதண்டபாணி முதலிய கலைத் தெய்வங்களும் தமிழ் வளர்த்தவர்களுமாகக் காட்சி தந்தனர்.

காலை 9–30 முதல் 11 மணி வரையும் முதலிருக்கை; 11–30 முதல் 1–00 வரை மறுஇருக்கை; 2–45 முதல் 4–30 வரை மூன்றுவதிருக்கை. இப்படியே ஒவ்வொரு நாளும் மூன்றிருக்கைகளாக நிகழ்ச்சி நிரலை அமைத்திருந்தனர். கருத்தரங்கின் முதல் நாள் முதலிருக்கை காலை 9–30 மணிக்குத் தொடங்கிற்று. இந்த நிகழ்ச்சிக்கு, ''தென் கிழக்கு ஆசியாவில் வரலாறும் பண்பாடும்'' என்பது பெருந் தலைப்பாகும். சேவியர் தனிநாயக அடிகளார் தலைமை தாங்கினர்..... விவாதத் தலைவர் திரு ஜான்வில்லியோழா (அவர் தம் பெயரை வில்லியோழா என்றே தமிழில் பிரஞ்சு ஒலிக்கேற்ப எழுதுகிறார். எனவே, இனி நாமும் அப்படியேசெய்வோம்.) மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், திரு சிங்கார வேலு, சீனரான திரு ஹோ. பெங் யோக், அமெரிக்கரான ஹாரி எம். பக் முதலியவர்கள் மேடையில் வந்தமர்ந்தனர்.

முதலில் மகாகவி பாரதியாரின் பேத்தி, விஜயபாரதி ''வாழ்க தமிழ் மொழி'' எனத் தொடங்கும் பாரதி பாடலைச் செவிக்குத் தேனுய்ப் பாடினுர். கருத்தரங்கு களைகட்டி விட்டது.

பின்னர் இம்மாநாட்டுக்கு அரும்பணியாற்றிய சைவத் தமிழ்ப் பெரியார் கா. இராமநாதன் செட்டியாரும், மாநாட்டில் கலந்து கொள்ள இசைந்திருந்த ஓர் ஐரோப்பியப் பேராசிரியரும் காலமானதற்கு வருந்தி ஓர் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

கருத்தரங்கின் தலைவரான பேராசிரியர் தனிநாயக அடிகளார்,

> ''என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்ருகத் தமிழ் செய்யுமாறே''

என்ற திருமூலர் வாக்கைத் தொட்டு மாநாட்டின் அமைப்புபற்றி எல்லாம் எடுத்துரைத்துத் தமிழ் மொழியைப் புகழில் ஏற்றத் தலை நின்று பணியாற்றும் நக்கோர்க்கெல்லாம் நல்வரவு கூறி வரவேற்ருர். தம் உரை முடிவில், காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் அனுப்பியிருந்த அருளாசியை வாசித்தார்.

> ''இன்று கடாரத்தின் அன்பு நிழலில், இறைவன் அருளால், எந்நாட்டிலும் பரந்து நிற்கும் தமிழைப் போற்றி வளர்க்கும் ஊக்கத்துடன், கோலாலம்பூரில், பல்கலைக் கழக ஆதரவுடன், உலகத்தின் பல்வேறு திசைகளிலிருந்தும் வந்து கூடியிருக்கும் தமிழ்ப் பெருமக்களும், பிறமொழி அறிஞர்களும், ஆராய்ச்சியாளர்களும் ஒருங்கே கருத்தரங்கு அமைத்துக் கருத்தொருமித்துத் தெய்வத் தமிழ்த் தாய்க்கு நற்பணி புரிவார்களாக !
>
> தென்னுடைய சிவனே போற்றி !
> எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!''

இவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த, பார்த்துக் கொண்டிருந்த எங்களுக்

கருத்தரங்கில் கலந்து கொண்ட பெருமக்களில் ஒரு பகுதி- ---- கருத்தரங்கு மேடைப் பகுதி-





மலேயா பல்கலைக் கழகத் துணைவேந்தருக்குத் தமிழகத் தலைமை அமைச்சர் மாண்டிதாங்கித் நாலந்தை அன்பளிப்பாகத் தருகிருர்.

கெல்லாம் பெரியவர்கள் மட்டுமா, பாரதி, திருமூலர், மணிவாசகர் முதலியவர்கள் யாவருமே மாநாட்டின் கருத்தரங்கில் காட்சியருளத் தொடங்கி விட்டார்கள்.

என்ன, சங்கப் புலவர்கள் வரவில்லையா என்று சிலர் கேட்கலாம். மாநாட்டுக்கு வித்திட்டதுமே, சங்கச் சான்ரோர்கள் தன்னைவி புரியத் தொடங்கி விட்டார்கள்.... மாநாட்டு அமைப்பாளர்களுக்கு முதல் நன்கொடை கொடுத்தவர் சங்கப் புலவர் பெருமகனுகிய கணியன் பூங்குன்றன்தானும். வியப்பாக இருக்கிறதா? மாநாட்டுக்கு முதலே, ''யாதும் ஊரே; யாவரும் கேளிர்'' என்ற பூங்குன்றன் பாட்டின் முதல்தான் என்பதை யாரே அறியார்?

அண்ணுமலைப் பல்கலைக் கழக இணைவேந்தர் ராஜா சர் முத்தையா செட்டியார், கேரளப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முதலிய பலர் செய்திகளும், வாழ்த்துக்களும் அனுப்பியிருந்தனர். அவற்றில் சில படிக்கவும் பட்டன.

இவற்றுக்குப் பின்னர் விவாதத் தலைவரான ஜான் வில்லியோமூரா சிறப்புரை நிகழ்த்திக் கருத்தரங்குக்குப் பிள்ளையார் சுழி போட்டார். ஜான் வில்லியோமூரா பிரான்சு நாட்டினர்; பன்மொழிப் புலவர்; பாரிசிலுள்ள பிரான்சுக் கல்லூரியில் பேராசிரியர்; பாரிசிலுள்ள கீழ்க் கோடிச் சமுதாய ஆராய்ச்சிக் கூடத்தின் இயக்குநர்; புதுச்சேரியிலுள்ள இந்தியத்துவப் பிரெஞ்சுக் கழகத்தின் இயக்குநராகவும் இருக்கிருர். நேர்மையும் புலமையும் மிக்கவர். தமிழ்ப் பண்பாட்டில் ஊறித் திளைப்பவர். தம் மகனைத் தமிழருகவே ஆக்கி விட்டார். அவர் பஞ்சகச்சம் வைத்து வேட்டி கட்டிக் கொண்டு அடையாற்று ஜிப்பாவுடனேயே, அருமையாகத் தமிழ் பேசிக் கொண்டு புதுச்சேரியில் கலைப் பணி புரிந்து கொண்டிருக்கிருர்.

இவர் தம் உரையில் குறிப்பிட்டதாவது: இருபது நூற்றாண்டுகளுக்கு மேலாக இந்தியாவுக்குத் தென்கிழக்கு ஆசிய நாடுகளுடனும் அதன் மூலமாகக் கீழ்க்கோடி நாடுகளுடனும், மத்திய ஆசியாவுடனும் – தொடர்பு ஏற்பட்டிருந்திருக்கிறது. பண்பாடு, வாணிகம், புத்தமதப் பிரசாரம், இந்திய விஞ்ஞானம் ஆகிய துறைகளே அவ்வுறவுக்கு அடிப்படைக் காரணம். இதற்கு நேர்முகமாகச் சான்று பகர்வனவாக, கட்டட இடிபாடுகளும், யாத்திரையாளர்களின் குறிப்புகளும், நூல்களும், இந்திய மொழிக் கல்வெட்டுக்களும் கிழக்காசியா முழுவதிலும் விளங்குகின்றன. பல்வேறு மொழிகளிலும் இந்தியச் சொற்கள் பலப் பல புகுந்து கொண்டிருப்பதும் பல்வேறு நாடுகளிலும் காணப்படும் அவர்களின் கலைப் படைப்புக்களில் இந்தியப் பாணி பளிச்சிட்டுக் கொண்டிருப்பதும் இந்த உண்மைக்கு மறைமுகமாகச் சான்று கூறுவனவாகும்.

''வைதிக சமயமான ஹிந்து மதம் பிரசார மதமாயிருக்கவில்லை. எனவே, அது வெளிநாடுகளுக்குச் சமய பிரசாரகர்களை அனுப்பவோ, தன் மக்கட் தொகையை வளர்க்கவோ முயலவில்லை. புத்த மதக் குமாரர்களே கடல் கடந்து சென்று பணியாற்றி எண்ணற்ற மக்களைப் புத்த சமயிகளாக்கினர். ஆம்; மனு முதலிய அறநூல்களும் அந்தணர் கடல் கடப்பதை அனுமதிக்கவில்லையே !'' என்ற சில அறிஞர்களின் கூற்றைப் பலரும் பொதுவாக, எளிதில் ஏற்றுக் கொண்டு விட்டார்கள். ஆனல் அப்படிச் சொல்வது தவறு என்றே சொல்ல வேண்டும்.

மலேசியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மானுக்குத் தமிழகத் தலைமை அமைச்சர் கூத்தப்பிரான் செப்புத் திருமேனியை அன்பளிப்புச்செய்கிருர்.



சென்ற நூற்றாண்டின் 'பிற்பகுதியில் வைதிக சமயச் சின்னங்களும், சம்ஸ்கிருதக் கல்வெட்டுக்களும் ஏராளமாகக் கிடைத்திருக்கின்றன. இவை தென்கிழக்கு ஆசியப் பகுதியிலும் இந்தோனேஷியாவிலும் கிடைக்கப் பெற்றவையாகும். அது மட்டுந்தானா?— இந்தோ சீனாவிலும், இந்தோனேஷியாவிலும் கிடைத்த பல பிடிபாடு (Document)களிலும் வேதமொழிச் சொற்றொடர்கள் அப்படியே எடுத்தாளப்பட்டிருப்பதைக் காண முடிகிறது.

ஆனால், அந்தணர்கள் கடல்கடக்க முடியாத போது இவையெல்லாம் எப்படியேற்பட்டன என்பதொன்றுதான் இதுவரை விடுவிக்க முடியாத புதிராக இருந்தது. அப்பாடா! அந்தப் புதிரும் இப்பொழுது சிக்கறுபட்டு விட்டது. தமிழகத்தில் நடைபெற்ற தமிழாராய்ச்சிக்கும், சம்ஸ்கிருத ஆராய்ச்சிக்குமே நம் பாராட்டும் நன்றியும் உரியனவாகும். ஏன், தென்கிழக்காசியாவில் நடைபெற்ற ஆராய்ச்சிக்கும் நாம் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம். முதலில் இதை ஆராய்வதில் தமிழ் ஆராய்ச்சித் துறை ஆர்வம் காட்டவில்லை. ஏனென்றால், சம்ஸ்கிருதக் கல்வெட்டுக்கள் சம்ஸ்கிருத இலக்கிய மேற்கோள்களுடன் கூடியவை எண்ணிக்கையில் அதிகம். தமிழ்க் கல்வெட்டுக்களோ எண்ணிக்கையில் குறைவானவை. மேலும் தமிழ்க் கல்வெட்டுக்கள் பெரும்பாலும் பிற்காலத்தவை. எனவே, தென்னகத்தைவிட வடபுலத்தவரே கீழைநாடுகட்கு முற்படச் சென்றவர்கள் என்று கருதப்பட்டது.

நாம் தமிழகப் பண்பாட்டைத் துருவி ஆராய்வோமானால், தமிழ்ப் புலவர்கள் பல நூற்றாண்டுகளாகவே தமிழில் மட்டும் கவிதைகளும், கல்வியையும் படைக்கவில்லை என்பதையும், சம்ஸ்கிருத இலக்கியத்துக்கும், தத்துவத்துக்கும் பெரும் பணியாற்றியுள்ளனர் என்பதையும் நன்கறிவோம். உலகப் புகழ் சூடிய தத்துவ ஞானிகளான சங்கரரும், இராமானுஜரும் தண்டி ஆசிரியரும், ''உபயகவி''களாவார்கள் என்பதைக் குறிப்பிடாமல் இருமா ?

அன்றியும் தமிழர்கள் சம்ஸ்கிருதத்தில் எழுதும் போது வடபுல மரபை முற்றிலும் கையாண்டார்கள் என்று கூற முடியாது. பெரும்பாலும் சம்ஸ்கிருதத்தைத் தமிழர்கள் கையாண்டதற்குக் காரணம் பரந்த அளவில் கருத்துத் தொடர்பு இருக்க வேண்டும் என்பதற்காகவே. மேலும் தமிழன் மரபுக்கேற்பக் கருத்துக்களைப் பரப்ப வேண்டும் என்பதற்காகவே சம்ஸ்கிருதத்தில் எழுதலானார்கள்.

உதாரணத்துக்கு ஒன்றைப் பார்க்கலாம். நம்மாழ்வாரின் 'உயர்வற உயர்நலம் உடையவன்' என்ற பாசுரத்தின் கருத்து, தத்துவச் செறிவு, இராமாநுஜரை ஆட்கொண்ட ஒன்றாகும். அதற்கு அவர் சம்ஸ்கிருதத்தில் புலமை வாய்ந்த விளக்கம் சூட்டியருளினார்.

தமிழ் நாட்டில் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பிருந்தே தமிழும், சம்ஸ்கிருதமும் இலக்கிய மொழிகளாக இருந்திருக்கின்றன. கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே மகத நாட்டுக்கும் தமிழகத்துக்கும் நல்லுறவு இருந்து வந்திருக்கிறது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் மகதநாட்டுக்கு வந்திருந்த கிரேக்க தூதுவன் மதுரை மீனாட்சியின் வரலாற்றைப் பாடலிபுரத்தில் கேட்டதாக எழுதியுள்ளான். அவனோ பாண்டிய நாட்டுக்கு எப்பொழுதுமே வந்தவனில்லை.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் அசோகன் தன் சாசனத்தில் முத்தமிழ் நாடுகளையும் பற்றிக் குறிப்பிடுகிறான்.

எது எப்படியிருப்பினும் சங்கப் புலவர்கள் பலர் நான்மறையையும் சம்ஸ்கிருதத்தையும் நன்கறிந்திருந்தார்கள் என்பது தெளிவு. அவர்கள் வைதிகச் சடங்குகளையும், வேள்வி அல்லது யாகத்தையும், கேள்வி அல்லது சுருதியையும், மறை அல்லது வேதத்தையும் பற்றி எல்லாம் அடிக்கடி குறிப்பிடுகிறார்கள். கார்கிழார், பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாராட்டும் புறநானூற்று ஆறாவது பாட்டு அம்மன்னன் சைவனாக வாழ்ந்ததையும் அதே போது வேத வேள்வியை ஆதரித்ததையும் புலப்படுத்துகிறது.

தமிழ், தமிழர்களின் இதய மொழியாகவும், சம்ஸ்கிருதம் கலைப் பயிற்சிக்கும், அரச காரியங்களுக்கும் என்ற நிலை இருந்து வந்திருக்கிறது. தமிழர்கள் எங்கு சென்றாலும் இருமொழிப் புலமையாளர்களாக விளங்கினர். வெளிநாடுகளில் அரச காரியங்களுக்கும் பொதுத் தொடர்புக்கும் சம்ஸ்கிருதத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். கல்வெட்டுச் சின்னங்கள் முக்கியமாக அரச காரியமானவையே. ஆனதாலேதான் அவை பெரும்பாலும் சம்ஸ்கிருதமாய் இருக்கின்றன.

தாய்லாந்திலும், கம்போடியாவிலும் அரச குடும்பச் சடங்குகள் யாவும் 'பிராமணர்கள்' என்பவர்களாலேயே நடத்தப்படுகின்றன. சடங்கு நூல்களைப் பிராமணர்கள் கிரந்த லிபியில் எழுதிப் புத்தகமாக வைத்திருக்கிறார்கள் என்பது யாவரும் அறிந்ததே. கிரந்த எழுத்து முழுக்க முழுக்கத் தமிழ் நாட்டுக்கே உரியதாகும். அவர்களின் மூதாதையர், இராமேசுவரம் முதலிய இடங்களிலிருந்து வந்தார்கள். சிலர் தம் முன்னோர் நேரே கயிலாயத்திலிருந்தே வந்ததாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இவர்களிடமுள்ள நூல்கள் யாவும், வேத, ஆகம மேற்கோள்களுடனேயே இருக்கின்றன. இவர்களைப் பற்றிப் பேராசிரியர் மீனாட்சி சுந்தரனார் ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டுள்ளார். 'தாய்லாந்தில் திருப்பாவை திருவெம்பாவை' என்பதே அதன் பெயர். மேலும் பல விவரங்களை இம்மாநாட்டில் சமர்ப்பிக்கும் பொருட்டுக் கொண்டு வந்திருக்கிறார். வில்லியோமூா மேலும் சில பேசித் தம் உரையை முடித்தார்.

பின்னர் தெ. பொ. மீ. தமது எழுத்துரையை வழங்கினார். முதலில் ஆங்கிலத்தில் படித்துவிட்டு விளக்கம் கூறினார்:

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்பது வெறும் உபதேச மொழியாக இருக்கவில்லை; வாழும் வழி அது என்று வாழ்ந்து

---

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்ட் பிரைவேட் லிட்.

(நிறுவியது : 1947)

தலைமைக் காரியாலயம் &
ரிஜிஸ்டர்டு ஆபீஸ் :
பாலுஸேரி பில்டிங்
3, சிங்கராச்சாரி தெரு
சென்னை - 5

கிளைகள் :
புது டெல்லி-1, 3 & 6
பெங்களூர்-9
கல்கத்தா - 29
பம்பாய் -1 & 22

## ஏலச் சீட்டுகள் - 1966 ஜூலை ஸீரிஸ்

### பம்பாய் கிளைகள்

**கிங்ஸ் சர்க்கிள் கிளை**

விஷ்ணு விஹார்
(ஷண்முகானந்தா சபா அருகில்)
17-A, ரிஜைனல் ரோடு, பம்பாய்-22 D. D.
போன் : 471455 - தந்தி : BROWRICH

ஏலத் தேதி : 10-7-66
சேரக் கடைசி தேதி : 9-7-66

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|
| குறுகியகால சீட்டுகள் | | | |
| A | 200/- | 25 | 5000/- |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| நீண்டகால சீட்டுகள் | | | |
| C | 200/- | 50 | 10000/- |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**போர்ட் (Fort) கிளை**

சத்னாம் மான்ஷன் முதல் மாடி
245, பி. டிமெல்லோ ரோடு
(G. P. O. அருகில்) பம்பாய் - 1 B. R.
தந்தி : EVEIMARS

ஏலத் தேதி : 23-7-66
சேரக் கடைசி தேதி : 22-7-66

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|
| குறுகியகால சீட்டுகள் | | | |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| நீண்டகால சீட்டுகள் | | | |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

கிங்ஸ் சர்க்கிள் கிளை :
வேலை நேரம் : காலை 8 முதல் 10-30 மணி வரை : மாலை 4 முதல் இரவு 8 மணி வரை
வார விடுமுறை நாள் – வெள்ளி

போர்ட் (Fort) கிளை :
வேலை நேரம் : காலை 11 முதல் மாலை 6 மணி வரை
வார விடுமுறை நாள் – ஞாயிறு

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

**பாலுஸேரி மூலம் சேமிப்புகளைப் பெருக்கி பயனடையுங்கள்**

காட்டினர். அதை விளக்கும் முறையில் என் எழுத்துரை அமைந்திருப்பதைக் காணலாம்.

துணிகரமுள்ள தமிழர்கள் திரைக் கடல் கடந்து புதிய நிலங்களுக்குச் சென்றார்கள். சில போது புதிய அரசை நிறுவினர். சில போது உள்ள அரசுக்கு உதவினர். பிற்காலத்தில் தமிழ் வாணிகர்கள் ஆதாயம் கருதி மட்டும் இன்றி அந்நாட்டு மக்களுடன் நெருங்கிய உறவை வளர்த்துக் கொள்ளும் பொருட்டும் சென்றார்கள். அதற்காகத் தாமாகவே முன்வந்து நிரந்தரமான அறக் கட்டளைகளை நிறுவவும் செய்தனர். அந்தணர்கள் உள்பட அவர்களிற் பலர் தாய்லாந்து முதலிய நாடுகளில் சென்றடைந்து குடிமக்களாகவும் ஆகி அங்கேயே வாழலாயினர். பெருங் கடல் கடந்து பெண்டிரை உடனழைத்துச் செல்லும் வழக்கம் அந்நாளில் இல்லை. தங்களுடன் மந்திர நூல்களையும் சடங்கு நூல்களையும் எடுத்துச் சென்ற அந்தணர்கள் கூடவே தேவார திருவாசகங்களையும் கொண்டு சென்றனர். அவர்கள் ராஜ குருமார்களாக வாழ்ந்தனர். மிக உயர்ந்ததான 'பட்டாரகர்கள்' என்ற பட்டத்தையும் பெற்றனர். அவர்கள்கூட அந்நாட்டு மகளிரை மணந்து கொண்டனர். மங்கிய நினைவிலிருந்து தமிழகத்தில் இராமநாதபுரத்திலிருந்து தங்கள் மூதாதையர் வந்ததாக என்னிடம் நேரில் கூறினர்.

ஹிந்துக்கள் தென்னிந்தியாவிலிருந்தும், வங்காளத்திலிருந்தும் வந்திருக்கிறார்கள். தமிழகத்திலிருந்து வந்தவர்களில் சிலர் தமிழ்ப் பாசுரங்களுடனும், சடங்கு நூல்களுடனும் வந்திருக்கிறார்கள். அவை இன்றும் அவர்களிடமுள்ளன; அவை அந்நாட்டு லிபியில் எழுதப்பட்டிருக்கின்றன. தொல்கலை நெறிப்படி நோக்கும் போது அவை 12ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என நான் கணிக்கிறேன். தமிழ்ப் பாசுரங்கள் ஓதி நடத்தப்படும் இச்சடங்கு முறையை ஆழ்ந்து நோக்கினால் இது மேலும் சில நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே நடைமுறைக்கு வந்திருக்க வேண்டும்; அக்காலத்தே எழுதியிருப்பின் பிறநாட்டு லிபியின்றித் தமிழ் எழுத்திலேயே எழுதியிருப்பார்கள் என்பனவெல்லாம் நன்கு புலனாகும்.

முடிசூட்டு விழாவில் நடைபெறும் ஒரு சடங்குக்கு ''கயிலாய வாயில் திறப்பு'' என்ற பெயர் வந்திருக்கிறது. அதற்கு ஓதப்படும் மந்திரம் என்ன என்பதைப் பார்க்கும் போது வியப்பாக இருக்கும். அப்பர்பெருமான் பாடிய முதற்பாட்டுத்தான் அது. ஆம், ''கூற்றாயினவாறு விலக்ககிலீர்'' எனத் தொடங்கும் பாசுரமே என்றால் வியப்பு மட்டுந்தானா, மகிழ்ச்சியுங்கூட ஏற்படுவது நியாயந்தானே?

தாய்லாந்தின் தேசியத் திருவிழாவின் பெயர் என்ன தெரியுமா? மிக்க பக்தியுடன் 'திருப்பாவை — திருவெம்பாவை' என்று கூறுவர் அந்நாட்டு மக்கள். பாங்காக் நகரில் ஒரு சிவன் கோயில் இருக்கிறது. அங்கே சிவபெருமான், நடராஜர், பார்வதி ஆகிய மூர்த்திகளுடன் மணிவாசகரும் காட்சி தருகிறார். இன்னொரு படிமம் இருக்கிறது. அது ஆண்டாளாக இருக்க வேண்டும் என நான் கருதுகிறேன். ஆனால் அந்தக் கோயிலின் குருக்கள்மார்கள் பொருத்தமேதுமின்றி அதை பத்திரகாளி என்கின்றனர். சாதி, மதம், கொள்கை வேறுபாடின்றி எல்லா மக்களும் வந்து வணங்குவார்கள். மன்னர் கொடைப் பொருள்களை அனுப்புவார். அக் குருக்கள்மாரே 'ராஜகுரு' என்று மதிக்கப் பட்டவர்கள். அவர்களே திருப்பாவை திருவெம்பாவை பாடுபவர்கள். அவர்கள் இன்று பாடுவது திருவெம்பாவையின் முதல் இரண்டு பாடல்கள் மட்டுமே.

பாங்காக்கில் உள்ள ஹிந்துக் கோயில்கள் மூன்று. ஊஞ்சற்பெருவிழா நடைபெறும் சதுக்கத்தின் அணித்தே இவையுள்ளன. ஒன்று சிவன் கோயில்; மற்றொன்று விநாயகர் கோயில்; மூன்றாவது பெருமாள் கோயில். இப் பெருமாளின் திருநாமம் 'சுகோதயப் பெருமாள்' என்பதாகும்.




இது தேசியக் கடவுளாகக் கருதப்படுகிறது. தெ. பொ. மீ. உரையின் பின்னர் மலாயாப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு எஸ். சிங்கார வேலு, 'தாய்லாந்துக்கும் தென்னிந்தியாவுக்குமிடையே பண்பாட்டுறவுகள்' என்ற எழுத்துரையையும், திரு ஹோ பெங் யோக் 'கிழக்காசியாவில் இந்திய விஞ்ஞானம்' என்ற எழுத்துரையையும், தனிநாயக அடிகளார், 'கெடா சான்றுகளின் மீது ஒரு குறிப்பு' என்ற எழுத்துரையையும், ஹாரி எம். பெக் என்னும் அமெரிக்கர், 'தெற்கு தென் கிழக்கு ஆசியாவில் இராமாயணம்' என்ற எழுத்துரையையும் வழங்கினர்.

தோக்கியோ பல்கலைக் கழகப் பேராசிரியர் யுதாகா இவாமோட்டோ நேரில் வர முடியாமையால் அவர் அனுப்பியிருந்த, 'ஹோ — வின் அரசு' என்னும் எழுத்துரையைப் பிறிதொருவர் (பெயர் நினைவில்லை; மன்னிக்க வேண்டும்) படித்தார்.

என்ன! எல்லாரும் எழுந்து விட்டனரே! குளிர்பதனம் செய்யப்பட்டிருக்கும் மண்டபத்தின் கதவுகளும் கூடத் திறக்கப்பட்டு விட்டனவே! சரிதான்; மணி பதினொன்றாகி விட்டது. தேநீர் அருந்தப் போக வேண்டும். பிறகு சந்திப்போம். (தொடரும்)




சட்டநாதனும் உஷாவும் தங்களை மறந்து ஒருவர் விழிகளை ஒருவர் உற்று நோக்கிய வண்ணம் இருந்த போதுதான் அந்த விபரீதம் நடந்து விட்டது.

கீழே தெருவில் ஒரு மோட்டார்க் காரின் குழல் ஒலி கேட்டதுதான் அதற்கு முன்னோடி.

உஷா துள்ளி எழுந்து, ''ஐயோ!'' என்று அலறினாள்.

''அந்த நாற்காலியில் மூட்டைப்பூச்சியே கிடையாது! போன ஞாயிற்றுக்கிழமைகூட வெயிலில் போட்டு எடுத்து வைத்தேனே!'' என்று உறுதி கூறினான் சட்டநாதன்.

''மூட்டைப்பூச்சி இல்லை.... இது வேறே.. அதைவிடப் பெரிது....!''

''ஆணியில் மாட்டிப் புடவை கிழிந்துபோய் விட்டதா?'' என்று அடுத்தபடியாக அனுதாபப்பட்டான் சட்டநாதன்.

''ஐயோ!.... ஐயோ....! புடவை கிழியவில்லை.... இப்போது உங்கள் மானம், என் மானம் எல்லாம்தான் கிழியப் போகிறது.... கீழே வந்திருப்பது அப்பாவினுடைய கார்.... இத்தனை நேரம் அவர் மாடி ஏறிக் கொண்டிருப்பார்.''

''சும்மா பயம் காட்டாதே!.... என் அப்பாவை இன்று காலைதான் எக்ஸ்பிரஸ் பஸ்ஸில் அக்காள் வீட்டுக்கு நாகப்பட்டினம் அனுப்பிவிட்டு வந்தேன்.... ஓஹோன்னானாம்!'' என்று அட்டகாசமாகச் சிரித்தான் சட்டநாதன்.

''-ஐயோ!.... ஐயோ!.... ஐயோ....!'' என்று மும்முறை தலையில் போட்டுக் கொண்டாள் உஷா. ''நான் உங்கள் அப்பாவைச் சொல்லவில்லை.... என் அப்பாவை!''

ஆயிரம் தேள்கள் ஒருங்கே கொட்டினாற் போல் துள்ளினான் சட்டநாதன். ''உன் அப்பாவா?.... மிஸ்டர் சாரநாதனா?....என் ஸீனியரா? இங்கேயா....? ஐயய்யோ!'' என்று கூவினான்.

கீழே காவல்காரனை அவர் விசாரிப்பது கேட்டது.

''என்ன செய்வது?'' என்றபடி கையைப் பிசைந்தபடி நின்ற உஷாவை அறைக்கு வெளியே இழுத்தான். தன் அறைக் கதவைப் பூட்டுவதற்கென்று வைத்திருந்த பூட்டையும் சாவியையும் கையில் எடுத்துக் கொண்டான். அதே வரிசையில் நான்காவது அறை திறந்திருந்தது. உள்ளே ஒருவரும் இல்லை. உஷாவை அந்த அறையினுள் தள்ளி, கதவை மூடித் தன் பூட்டால் பூட்டினான். சாவியைப் 'பாண்ட்' பாக்கெட்டில் பத்திரப் படுத்திய பிறகு அவன் விட்ட பெருமூச்சுக்கு எதிர்மூச்சு வாங்கியபடி எதிரில் வந்து நின்றார் சாரநாதன் — உஷாவின் தந்தை.

''ஸார்! நீங்களா!.... வாருங்கள்..... வாருங்கள்....!'' என்றான் சட்டநாதன் மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க.

''சட்ட நாதா!'' என்று அருமையாக அழைத்தார் ஸீனியர்.

''என்ன ஸார், ஒரு ஆள் அனுப்பியிருந்தால் நான் ஓடோடி வந்திருக்க மாட்டேனா? நேற்று எல்லா வேலைகளையும் சரியாக முடித்து விட்டுத்தானே வந்தேன்? மக்கிப் பட்டி மகாலிங்கம் கொலை வழக்கில்....''

''அதெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. உன்னைப் பார்க்க நான் சாதாரணமாக வரக் கூடாதா?''

''ஓ! தாராளமாய் வரலாமே! தாராளமாய்.... நீங்கள் என்ன சாப்பிடு....'' என்று கேட்டவன் முகம் பேயைக் கண்டவன் போல் வெளிறிப் போயிற்று. சற்றுமுன் உஷாவுடன் சேர்ந்து சாப்பிட்ட காப்பிக் கோப்பைகள் இரண்டும் அகற்றப்படவில்லை.

''இந்த 'லாட்ஜ்' பியூன் மகா சோம்பேறி ஸார்.... பாருங்களேன், காலையில் சாப்பிட்ட காப்பிக் கோப்பை, இப்போது சாப்பிட்டது எதையுமே எடுத்துப் போகவில்லை!'' என்று இரண்டு கோப்பைகள் இருந்த காரணத்தை விளக்கினான். அவன் மனம் நிம்மதியடைய வொட்டாமல் இன்னுமொரு அதிர்ச்சிக்கு அவன் அப்போது உள்ளானான்.

ஆமாம்! உஷாவின் டம்பப் பை அங்கு ஒரு நாற்காலியில் கிடந்தது....!

''நீங்கள் இப்படி உட்காருங்கள் ஸார்!'' என்று கூறியவன் பாய்ந்து போய் அந்த டம்பப் பை இருந்த நாற்காலியில் தான் அமர்ந்து கொண்டான்.

சாரநாதன் அவன் காட்டிய நாற்காலியில் அமர்ந்தார்.

''ரூம் நன்றாக இருக்கிறது.... என்ன வாடகை தருகிறாய்?''

''இருபத்தைந்து ரூபாய் ஸார்!'' என்றான் அவன் பணிவுடன்.

''உம்.... இந்தப் பக்கம் நான் ஒரு முக்கிய வேலையாக வந்தேன். அப்படியே உன்னையும்....''

''நீங்கள் வருவது தெரிந்திருந்தால் நான் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருப்பேன்.... அதாவது இந்த அறையை

இன்னும் நன்றாகத் தயார் பண்ணியிருப்பேன்.... ஒரே குப்பையும் கூளமுமாய்.... ஹி....ஹி.....'' என்று நெளிந்தான் அவன். டம்பப் பை உட்காரக் கொஞ்சம்கூட இதமாக இல்லை.

''சொல்லிக் கொண்டு வந்தால் காரியமே கெட்டிருக்கும்'' என்றார் சாரநாதன். பிறகு, ''சரி... நானும் புறப்பட வேண்டும். நேரமாகி விட்டது. உஷாவை அனுப்பினால் கூட்டிப் போகிறேன். அவள் எங்கே?'' என்றார்.

''உஷாவா?.... யார் ஸார், அது?.... ஓஹோ....! நம்ம உஷாவைச் சொல்கிறீர்களா?'' என்று கேட்டான் சட்டநாதன் ஒன்றும் புரியாதவன் போல்.

''எனக்கு உன்னுடைய உஷாவைப் பற்றித் தெரியாது... நான் என் பெண் உஷாவைக் கேட்கிறேன்... எங்கே அவள்?'' என்றார் ஸீனியர் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு.

''எனக்கு எப்படி ஸார், தெரியும்?'' என்று அப்பாவி போல் அபிநயித்தான் சட்டநாதன்.

''இங்கேதான் வந்திருப்பதாகச் சொன்னார்கள்.....''

''இல்லையே ஸார்! உங்களிடம் யாரோ தப்பாகச் சொல்லியிருக்கிறார்கள்.''

''இந்த வீட்டின் முன்னால் நீங்கள் இருவரும் டாக்ஸியில் வந்து இறங்கியதைப் பார்த்ததாகப் பத்து நிமிடங்களுக்கு முன்புதான் போன் பண்ணினான் வைத்தா.''

''யார் ஸார், வைத்நா....? நம்ம குமாஸ்தாவா?''

''நம்ம'' என்று சட்டநாதன் உரிமை கொண்டாடுவது சாரநாதனுக்கு இம்மியும் பிடிக்கல்லை.

''என் குமாஸ்தாவைத்தான் சொல்கிறேன்'' என்றார் விறைப்பாக.

''அவருக்குக் கண் பார்வை பற்றாது, ஸார்.... யாரையோ பார்த்து யாரோன்னு நெனச்சு....''

''அப்போ நீ உஷாவோட வரல்லியா?''

''இல்லே, ஸார்!''

''பின்னே, எந்தப் பெண்ணோடு வந்தே?'' என்று கேட்டார் சாரநாதன் சட்டென்று.

''பெண்ணா? என்ன ஸார் சொல்கிறீர்கள்? நான் யாருடனும் வரவில்லே.... தனியாக.... ஆமாம், ஸார்! நான் எங்கேயும் போகவில்லையே.... போனால்தானே வருவதற்கு?'' என்றான் அவன்.

''சட்டநாதா!'' என்று அன்புடன் அழைத்தார் ஸீனியர்.

''ஸார்!'' என்றான் அவன் ஜூனியருக்குள்ள பணிவுடன்.

''நான் யார் தெரியுமல்லவா?'' என்று கேட்டார் அவர் அடுத்தபடி.

''என்ன ஸார், அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்று இளித்தான் சட்டநாதன்.

''ஒரு காரியமாகத்தான் கேட்கிறேன். சொல்!'' என்று தூண்டினார் வக்கீல்.

''பிரபல வக்கீல் மிஸ்டர் சாரநாதன், எம்.ஏ., பி.எல்.!''

''நீ....?''

''உங்கள் ஜூனியர் ஸார்... உங்களிடம் டிரெயினிங் எடுக்கக் கொடுத்துவைத்தவன்.''

''என்னைப் பற்றி உனக்குத் தெரியும்.... நான் எதையும் தீர விசாரித்து விட்டுத்தான் பேசுவேன் என்று....'' — குறுக்கு விசாரணை செய்யும் பாணியில் சாரநாதனின் கை உயர்ந்தது.

''ஆமாம், ஸார்!''

''எனக்குக் கண் பார்வையில் கோளாறு ஒன்றுமில்லேயே!''

''நிச்சயம் இருக்காது, ஸார். போன வாரம் 'டெஸ்ட்' பண்ணிக் கொண்டு கண்ணாடி மாற்றினீர்கள்?.....''

சாரநாதன் ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

''கரெக்ட்! அப்படியானால் காஸினோவில் இன்று காலே ஸெகண்ட் க்ளாஸில் பத்துமணி மாட்டினிக்கு இருபத்திரண்டு இருபத்துமூன்று எண்ணுள்ள ஸீட்டுகளில் இருந்தது சட்டநாதனும் உஷாவும்தானே ?''

சட்டநாதனுக்கு உடம்பெல்லாம் வியர்த்தது. பக்கத்து மேஜையின் மேல் ஸினிமா டிக்கெட்டுகளின் பாதி கிடந்தன. தன் இருக்கையை விட்டு எழுந்தவன் ஜன்னல் வழியே அவைகளை வெளியே எறிந்துவிட்டு மீண்டும் அமர்ந்து கொண்டான்.

''குற்றம் நடந்திருக்கும் போது சாட்சிப் பொருள்களை அகற்றுவதும் குற்றத்துக்கு உடந்தையாக இருப்பது போல்தான், இல்லையா?.....'' என்று முழங்கினார் ஸீனியர்.

''அது உண்மைதான், ஸார்.... ஆனால் நான் தூக்கி எறிந்தது வேறே.... நானும் என் ஃப்ரெண்டுமாக நேற்றுப் போனது.... இங்கு அநாவசியமாகக் குப்பை எதற்கு என்று....''

''நீ இன்னும் என் கேள்விக்குப் பதில் சொல்லவில்லே. 'காஸினோ' தியேட்டரில்..'' என்று ஞாபகப்படுத்தினார் சாரநாதன்.

''எனக்குச் சந்தேகம்தான்!'' என்று தொடங்கிய சட்டநாதனைப் பார்த்து, ''என்ன உளறுகிறாய்?'' என்று அதட்டினார் உஷாவின் அப்பா.

''அவர்தான், ஸார்! அந்த டாக்டர்.... உங்களுக்குக் கண் 'டெஸ்ட்' செய்தாரே, அவர் அத்தனே கெட்டிக்காரர் இல்லே. நீங்கள் மறுபடியும் கண்ணாடியை மாற்ற வேண்டும் போல் இருக்கிறது.... ஸார்....!'' என்றான் அவன்.

சாரநாதன் நிதானித்தார். ''தவறு எங்கேயோ நடந்திருக்கிறது....'' என்றார் அவர்.

''ஆமாம், ஸார்! நம்ம உஷா இல்லே ஸார்!.... உங்கள் உஷா.... எத்தனே நல்ல பெண் ஸார்? தப்பான வழியில் போவாளா ஸார்? கல்யாணம் ஆக வேண்டிய பெண்.... கண்டவர்களுடன் சுற்றுவாளா ஸார்?.... காலேஜுக்கு ஸ்பெஷல் க்ளாஸுக்குப் போய் இருப்பாள்.....'' என்று சமாதானப்படுத்தினான் சட்டநாதன்.

''அப்படித்தான் அவள் சொல்லிவிட்டுப் புறப்பட்டாள்.''

''அங்கே போய்ப் பார்த்தீர்களா?''

''பார்த்தேன்!....'' என்றார் சாரநாதன் சுருக்கமாக.

''அங்கே அவள் இல்லையா, ஸார்?'' என்று கவலையுடன் விசாரித்தான் சட்டநாதன்.

''இல்லை.... உஷா மட்டுமல்ல... இன்று 'ஸ்பெஷல்' ஸிஸாலே இல்லை....''

சட்டநாதன் தலையைக் குனிந்து கொண்டான். சாரநாதன் ஆதரவாக அவன் தோள் மேல் கையை வைத்துக் கொண்டார்.

''நான் எத்தனை சந்தோஷத்துடன் இங்கே வந்தேன், தெரியுமா?''

''என்ன ஸார், சொல்கிறீர்கள்?''

''உன் மாதிரி ஒரு நல்ல பிள்ளையை—முன்னுக்கு வரக் கூடிய ஒரு 'யங் அட்வொகேட்டை'க் காதலிக்கிறாள் உஷான்னு நினைச்சேன். உன்னோடு அவள் பழகுகிறாள்னு தெரிந்த போது எனக்கு எத்தனை திருப்தி தெரியுமா? 'அப்பாவுக்கு ஒருவித சிரமமும் வைக்கவில்லை பெண்' என்று நான் சந்தோஷப்பட்டேன்.''

''அப்படியா ஸார்?'' என்று கேட்டான் சட்டநாதன். அவனுக்குத் தெரியாதா சாரநாதனின் தந்திர மெல்லாம்? இப்படிப் பேசியே எத்தனை சாட்சிகளை மண் கவ்வ வைத்திருக்கிறார்?

''இப்போதுதான் தெரிகிறது.... அவள் உன்னைக் காதலிக்கவில்லை.... வேறு ஏதோ திரிதலையுடன் ஊர் சுற்றுகிறாள்....உம்...?''

சாரநாதன் எழுந்து விட்டார். அறைக்கு வெளியே மாடி வராந்தாவில் நின்று கொண்டார். ''எத்தனை அறை இருக்கிறது இங்கே?'' என்று விசாரித்தார்.

''எட்டு ஸார்!'' என்றான் சட்டநாதன் சட்டென்று.

''எல்லாம் ஒரே மாதிரிதானா?'' என்று அவர் வராந்தாவில் நடந்தார்.

வராந்தாவில் ஒரு பார்வையை ஓட்டிய சட்டநாதன் திகைத்துப் போய் நின்றான். எந்த அறையில் உஷாவை வைத்துப் பூட்டினானோ, அந்த அறையில் தங்கியிருப்பவன் இடுப்பில் துண்டுடன், கையில் அலுமினிய சோப் பெட்டி மின்ன, ஈரத் தலையுடன் நின்று கொண்டிருந்தான்.

''இந்தக் கூத்தைப் பார்த்தீர்களா? மிஸ்டர் சட்டநாதன்.... என்னையுமறியாமல் பூட்டி விட்டுப் போயிருக்கிறேன்... சாவியைக் காணவில்லை!'' என்று அங்கலாய்த்தான் அவன்.

எல்லா அறைகளுக்கும் ஒரே மாதிரி 'கோத்ரெஜ்' பூட்டு ஆதலால், அங்கு தொங்கியது தன் பூட்டு அல்ல என்று அந்த அப்பாவி கண்டு கொள்ள வில்லை.

சட்ட நாதனுக்குப் போய்க் கொண்டிருந்த உயிர் திரும்ப ஆரம்பித்தது. அடுத்தகணம் அது மறுபடியும் போகத் தொடங்கியது. உஷாவை உள்ளே தள்ளி மூடிய போது அவள் புடவைத் தலைப்பு கதவுகளின் மத்தியில் சிக்கியிருக்கிறது. அதன் நுனி இப்போது அவன் கண்களுக்குத் தெரிந்தது. உள்ளே உஷா பொறியில் சிக்கிய எலிபோல் துடித்துக் கொண்டிருப்பாள். எந்தக்கணத்தில் அவள் பொறுமை இழக்கப் போகிறாளோ?

சட்டநாதன் செய்த பிரார்த்தனையின் பலன்தான் சாரநாதன் பார்க்காமல் திரும்பி விட்டார். ஈரத் துண்டு வாலிபனுக்கு உலர்ந்த வேஷ்டி ஒன்று உடுத்தக் கொடுத்து விட்டு அவரை வழியனுப்ப விரைந்தான் சட்டநாதன்.

காரில் ஏறிக் கொண்டார் சாரநாதன்.

''அப்பா, சட்டநாதா! நான் தோற்றுத் தான் போய்விட்டேன்.... உன் முகத்தை முதலில் பார்த்த போது, நீ என்னமோ புத்திசாலியாய் இருக்க மாட்டாய் என்று எனக்குத் தோன்றியது....''

சட்டநாதன் ஒரு பாட்டில் விளக்கெண்ணெயைக் குடித்தாற்போல் நின்றான்.

''இப்போது தெரிந்து கொண்டேன்....நீ சாமர்த்தியசாலிதான்.... எனக்கு ஏற்ற மாப்பிள்ளைதான்.... எந்த இக்கட்டையும் நன்றாகச் சமாளிப்பாய்..... உனக்கு நான் என் பெண்ணைக் கொடுக்கத் தயார்!'' என்றார் சாரநாதன்.

சட்டநாதன் பேசவில்லை. இதுவும் ஒரு தந்திரமோ?

''உன்னை ஏமாற்ற வில்லை, நான்..... உண்மையாகச் சொல்கிறேன். அந்த அறையிலிருந்து உஷாவை விடுவித்து விடு.... அந்தப் புடவையைப் போன வாரம்தான் வாங்கிக் கொடுத்தேன்.... இருநூற்றைம்பது ரூபாய் கொடுத்து வாங்கியது. கிழிந்து வைக்கப் போகிறது!'' என்று கெஞ்சினார் அவர். சட்ட


COOK
BOOK

நாதன் மிகுந்த ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவர் காரைச் செலுத்திக் கொண்டு போய் விட்டார்.

ஃ ஃ ஃ

ஓட்டமாக ஓடிய சட்டநாதன் அந்த அறையிலிருந்து உஷாவை மீட்டான். நண்பனுக்கு நன்றி பல சொன்னான்.

''அப்பா!'' என்று பெருமூச்சுவிட்டபடி சட்டநாதனைப் பின்தொடர்ந்தாள் உஷா.

''உன் அப்பா சம்மதித்து விட்டார் நம் கல்யாணத்துக்கு!'' என்று மகிழ்ச்சியால் துள்ளினான் சட்டநாதன்.

''அப்படியா?'' என்றாள் அவள் ஆர்வத்துடன்.

''அந்த வைத்தா பயல் மாத்திரம் என்னிடம் ஒரு நாள் சிக்காமல் போகிறானா?.... கோளா சொல்லுகிறான்?.... அவன் தலையைக் கிள்ளி எறிந்து விடுகிறேன்....'' என்று கறுவினான் அவன்.

''பாவம்! அவர் என்ன செய்தார்?.... இங்கே அப்பாவை வரச் சொன்னதே நான் தானே!'' என்றாள் அவள் சாதாரணமாக.

''என்னது, நீயா?'' என்று அலறினான் சட்டநாதன்.

''ஆமாம்... நேற்றுத்தான் நம்மைப் பற்றி அப்பாவிடம் சொன்னேன். 'போயும் போயும் இந்தப் பையனைப் பார்த்துப் பிடித்தாயே, அம்மா!.... அவன் முகரையும் அவனும்?.... ஒரு ரசனை, சாமர்த்தியம் அதில் தெரிகிறதா?''

சட்டநாதன் முகம் தொய்ந்தது.

''.....என்று அப்பா சொன்னார்.... நிச்சயமாக அவர்தான் சொன்னார், நான் இல்லை.... உங்களைப் பற்றி எனக்குத் தெரியாதா? புதிதாகச் சொல்ல வேண்டுமா?'' என்று அவனைச் சமாதானப்படுத்தினாள் உஷா.

''அப்புறம்?'' என்று கேட்டான் சட்டநாதன்.

''இன்றைக்குத் திடீரென்று வருவதாகவும் நீங்கள் எப்படிச் சமாளிக்கிறீர்கள் என்று பார்ப்பதாகவும் சொன்னார். நீங்கள் பரீட்சையில் நூற்றுக்கு நூறு வாங்கி விட்டீர்கள். சரி, நான் வரட்டுமா?'' என்று கேட்டபடி நகர்ந்தாள் அவள்.

அடுத்த வினாடி உஷா கிரீச்சிட்டு அலறினாள்.

ஃ ஃ ஃ

சட்டநாதனுக்கும் உஷாவுக்கும் இன்னும் கல்யாணம் நடக்கவில்லை. சாரநாதன் கெஞ்சிப் பார்த்து விட்டார். சட்டநாதன்—(தனிமையில்) மண்டியிட்டுக்கூடக் கெஞ்சினான். கிட்டத்தட்ட இருநூறு பவுண்டு எடையுள்ள அவன் உட்கார்ந்து நசுங்கி உருமாறிப் போன டம்பப் பையைப் போல் புதிதாக ஒன்று வாங்கிக் கொடுத்தால்தான் கல்யாணத்துக்குத் தேதி வைக்கலாம் என்று அவள் திடமாகச் சொல்லி விட்டாள்.

சீனியரும் ஜூனியரும் அம்மாதிரி டம்பப் பையை இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்கள்!

# இடி விழுந்த நிலை!



(எஸ். நவராஜ்)



எதை வாங்கச் சென்றாலும் அடிவயிற்றில்
இடிவிழுந்த நிலைபோலே விலையில் ஏற்றம்
பதைபதைக்கப் பொருள் வாங்கி வீடுவந்தால்
பற்றாத நிலைதானே! பாடு பட்டே

விதை விதைத்துப் பயிர் வளர்க்கும் வளமார் நாட்டில்
விடியும்வரை உழைக்கின்ற மக்கள் கூட்டம்
உதைக்கிறதே இந்நாளில் உணவுப் பஞ்சம்
ஒருவழியும் காணோமே உயிரைக் காக்க!

துணிவுடனே போராடச் சொன்னார்! செய்தோம்
தோள்தட்டிப் பகைசாடச் சொன்னார்! செய்தோம்!
தணியாத தேசபக்தி வேண்டும் என்றார்
தங்கநகை மலைகுவித்தோம் சட்டம் செய்தே

பணிவுடனே வாழ்என்றார். பயந்தே வாழ்ந்தோம்.
பசிக்கொடுமை நமை விரட்டப் பயந்தே வந்து
உணவுகொடு உயிர்போகுதென்றே கேட்டால்
ஒருவரையும் காணோமே உணவைக் காட்ட!

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழிந்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட், நெய்வேலி-1.








# எப்படிக் கண்டுபிடித்தீர்?

நாடோடி

முன்னொரு காலத்தில் கிரேக்க நாட்டில் பிலிப் என்னும் அரசன் இருந்தான். அவன் ஏதோ ஒரு காரணத்துக்காக, ஒரு பெரிய அறிஞரைச் சிறையில் அடைத்து வைத்திருந்தான்.

ஒரு நாள் ஸ்பெயின் நாட்டு அரசன் இந்த அரசனுக்கு ஓர் அழகிய குதிரையைப் பரிசாக அனுப்பியிருந்தான். அது உயர்ந்த குதிரைதானா என்று கண்டுபிடிக்க வேண்டும் என்று பிலிப் அரசனுக்குத் தோன்றிற்று. சிறையில் அடைபட்டிருக்கும் அறிஞர் இது விஷயங்களைக் கண்டு பிடிப்பதில் மிகவும் கெட்டிக்காரர் என்று யாரோ சொல்லவே, அரசன் அவரைக் கூப்பிட்டு, ''இந்தக் குதிரையைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டார்.

அறிஞர் குதிரையை மேலும் கீழும் பார்த்தார். ''இது கழுதைப் பால் குடித்து வளர்ந்தது'' என்று சொன்னார். உடனேயே அரசன் ஸ்பெயின் நாட்டுக்கு ஆளை அனுப்பி, தகவல் விசாரிக்க, அறிஞர் சொன்னது உண்மையென்று தெரிந்தது. இக்குதிரையை ஈன்றதும் தாய்க் குதிரை இறந்துவிட்டதென்றும், அதைக் கழுதைப் பால் கொடுத்துத்தான் வளர்த்தார்கள் என்றும் சொன்னார்கள். உடனே அரசன் அறிஞர் மீது சந்தோஷப்பட்டு, ''அவருக்கு வேளைக்கு அரை ரொட்டி அதிகமாகக் கொடுக்க வேண்டும்'' என்று உத்தரவிட்டான்.

சில நாட்கள் சென்றதும் அரசனுக்குத் தன்னிடமிருந்த இரத்தினக் கற்களில் எது மிகவும் உயர்ந்தது எனக் கண்டுபிடிக்க வேண்டும் என்று தோன்றிற்று. குதிரையின் சர்வோத்திரத்தைக் கூறிய அறிஞரையே கேட்டால் என்ன என்று எண்ணினான். எண்ணியதோடு மட்டுமின்றி அந்த எண்ணத்தைச் செயலாக்கவும் செய்தான். அவன் அறிஞரைக் கேட்க, அவர் அவனையே கூறும்படி சொன்னார். அரசன் ஒரு கல்லை எடுத்து, ''இதுதான் உயர்ந்தது'' என்று கொடுத்தான். அறிஞர் அக்கல்லைக் கையால் தொட்டுப் பார்த்தார், பிறகு காதில் வைத்துப் பார்த்தார். ''இந்தக் கல்லில் ஒரு புழு இருக்கிறது'' என்று அரசனிடம் திருப்பிக் கொடுத்தார். அரசன் அதை உடைத்துப் பார்த்ததில், ஒரு புழு உள்ளே இருந்தது. அறிஞரின் திறமையைப் பாராட்டி, அன்றிலிருந்து அவருக்கு ஒரு ரொட்டி அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று அரசன் உத்தரவிட்டான்.

ஒரு நாள் அரசனுக்குத் தன் தாயாரின் கற்பிலேயே சந்தேகம் வந்து விட்டது. உடனே அறிஞரைக் கூப்பிட்டு, ''நான் உண்மையில் யாருக்குப் பிறந்தேன், அரசனுக்கா, அல்லது வேறு யாருக்காவதா ?'' என்று கேட்டான்.

இந்தக் கேள்விக்கு அறிஞர் பதில் சொல்ல மறுத்தார். பிறகு அரசன் மிகவும் வற்புறுத்திக் கேட்கவே, அவர் அவனைத் தனியாகக் கூப்பிட்டு, அவன் ஒரு ரொட்டிக் கடைக்காரனுக்குப் பிறந்தான் என்று சொன்னார். அரசன் தன் தாயாரைப் பயமுறுத்திக் கேட்கவே, அது உண்மைதான் என்று அவள் ஒப்புக் கொண்டாள்.

அரசன் அறிஞரைக் கூப்பிட்டு, ''எப்படி இந்த மூன்று உண்மைகளையும் கண்டுபிடித்தீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு அறிஞர் சொன்னார்: ''நான் எப்படிக் கண்டுபிடித்தேன் என்று சொன்னால், உனக்கு இவ்வளவு எளிதா என்று இருக்கும். முதலில் குதிரையின் காதுகள் நிமிர்ந்து இராமல் கழுதையின் காதுகளைப் போல வளைந்திருந்தன. ஆகவே கழுதைப் பாலைக் குடித்து வளர்ந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். பிறகு ரத்தினம் சாதாரணமாகக் கைக்கு ஜில்லென்று இருக்க வேண்டும். ஆனால் அதில் சற்றுச் சூடு தென்பட்டது. ஆகவே, புழு இருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன்.''

''ஆமாம், என் பிறப்பைப் பற்றிச் சொன்னது?'' என்று அரசன் கேட்டான்.

''அதுவா? நீ அரசனுக்குப் பிறந்திருந்தால், நான் முதலில் சொன்ன இரண்டு பதில்களுக்கும் ஏதாவது ஒரு நகரை அல்லது ரத்தினங்களைப் பரிசாகக் கொடுத்திருப்பாய். ஆனால் நீயோ அரை ரொட்டியும், ஒரு ரொட்டியும் கொடுத்தாய். ஆகவே, நீ ஒரு ரொட்டிக்காரனுக்குப் பிறந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன்'' என்றார்.

அரசன் அன்றே அவருக்கு நிறைய வெகுமதிகள் கொடுத்து விடுதலை செய்தான்.

(ஆதாரம்: ஓர் இத்தாலியக் கதை.)

# சொகுசாக அணிந்து செல்ல



## பின்னியின் புதிய டபிள் ஸிக்ஸ் பாப்ளின்

டபிள் ஸிக்ஸ், பின்னியின் உயரிய பருத்தி ஷர்ட்டிங்குகளில் புதியது. தரத்தின் உயர்வை எடுத்துக் காட்டும் தன்மை கொண்டது. எகிப்திய பருத்தியில் நெய்த இப் புதிய உயர்ந்த துணி பார்வைக்கு நேர்த்தியானது; அணிவதற்கு மென்மையானது; கோடையில் குளுமை தருவது. 'வெகு நாள் நீடித்துழைக்கக் கூடியது. இதுவே நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்த ஷர்ட்டிங்.

SANFORIZED




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்.

## பின்னி—துணி உலகில் புகழ் பெற்ற பெயர்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்,
பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ் ஸ்தாபனத்தின் ஒரு கிளை. JWT-BY-1164





# அம்மாக் கோண்டு சேது

வ. சா. நாகராஜன்

சாவித்திரியம்மாளின் மனசில் இருந்தது மிகவும் இயற்கையான ஆசை தான். நியாய மான, பொருத்தமான, மேன்மையான ஆசைதான். தனக்கு மருமகளாக வருபவள், மருமகள் மாதிரி இருக்கக் கூடாது, சொந்தப் பெண்ணைப் போலவே இருக்க வேண்டும் என்பதுதான். பெண் குழந்தை இல்லாத ஒரு தாயார் அப்படி ஆசைப்பட்டால் அதில் தவறு உண்டா?

சாவித்திரியம்மாள் இப்போதுதான் முதன் முதலாகப் பிள்ளைக்குக் கல்யாணம் செய்ப வள் அல்ல. இதற்குமுன் இரண்டு பிள்ளை களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. முதல் பிள்ளை டில்லியில் அதிகாரி. அங்கேயே பெரிய அதிகாரியாக இருப்பவருடைய பெண் அவ னுக்கு மனைவியாக வந்தாள். கல்யாணம் நடந்த பிறகு சென்னையில் மாமியார் வீட்டில் சில நாட்கள் தங்க வந்த அந்த மருமகள், சாவித்திரியம்மாளின் கண்களுக்கு மருமகள் மாதிரி இல்லை. கிண்டியில் ஓடும் ரேஸ் குதிரைகளை அவள் பார்த்ததில்லை. ஆனாலும் மூத்த மருமகளைப் பற்றி நினைத் தாலே அந்த எண்ணம்தான் அவளுக்கு வந்தது. நல்ல வாட்டசாட்டமான உடல். நன்றாக டென்னிஸ் ஆடுவாளாம். கோப்பை கள்கூட வாங்கியிருக்காளாம். சற்றைக்கொரு தடவை அவள் மூக்குக்கண்ணாடியைத் துடைத் துத் துடைத்துப் போட்டுக் கொண்டு மாமி யாரை நிமிர்ந்து பார்க்கும்போதெல்லாம் சாவித்திரியம்மாள் பயந்து போனாள்.

அடுத்த பையன் ஹைதராபாத்தில் இருந் தான். அவனுக்கும் நல்ல வேலைதான். முதல் நாட்டுப்பெண் விஷயத்தில் ஏமாந்துவிட்ட தாக எண்ணிச் சாவித்திரி அம்மாள் இரண் டாவது பிள்ளைக்குக் கல்யாணம் செய்யும் போது ஜாக்கிரதையாக இருந்தாள். இந்தத் தடவை உத்தியோகஸ்தர்கள் பெண் ஜாதகங்களைக் கையால் தொடக்கூட இல்லை. கடைசியில் அவள் நினைத்தபடியே தஞ்சாவூர் மிராசுதார் பெண்ணைப் பார்த்து நிச்சயித் தாள். இந்த மருமகள் அதிகமாகப் படிக்க வில்லை. டென்னிஸ் ஆடத் தெரியாது. கண்ணாடியும் போட்டுக் கொள்ளவில்லை. சீரும் வரிசையுமாக ஏராளமாகக் கொண்டு வந்தாள். இந்த நாட்டுப்பெண்ணாவது தன் னிடம் அன்பும் ஆசையும் மதிப்பும் வைப் பாள் என்று எதிர்பார்த்த சாவித்திரியம்மா ளுக்கு இந்தத் தடவையும் ஏமாற்றம்தான் கிட்டியது. ஹைதராபாத்தில் குடித்தனம் செய்த இந்த நாட்டுப்பெண் வருஷத்துக் கொரு தடவை வருவாள். இரண்டு நாட்கள் சென்னையில் தங்கி விட்டுக் கிராமத்துக்குப் போவாள். அங்கிருந்து திரும்பி வரும்போது ஒவ்வொரு தடவையும் கண்டிப்பாகத் தன்

அம்மாவுடன் வருவாள். அந்த அம்மாளும் ஒவ்வொரு தடவை வரும்போதும் ஒவ்வொரு வியாதியின் பெயரைச் சொல்லிக் கொண்டு சென்னை டாக்டரிடம் உடம்பைக் காண்பித்துக் கொள்ளும் சாக்கில் கூட வந்து இருந்து, பெண்ணை ஹைதராபாத் ரயிலில் ஏற்றி விட்டுவிட்டு ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் பெண்ணைப் பிரிவதற்குப் பிழியப் பிழிய அழுது விட்டுத்தான் ஊர் போய்ச் சேருவாள்.

ஆக, சாவித்திரியம்மாளுக்குத் தன் மீது தனிப்பட்ட முறையில் அன்பு செலுத்தித் தன்னை அந்தரங்கத்துடன் ''அம்மா'' என்று அழைக்கும் மருமகள் அமையவில்லை.

மூன்றாவது பிள்ளை சேது. நூற்றுக்கு நூறு அம்மா பிள்ளை; ஆசைப் பிள்ளை; செல்லப் பிள்ளை. உண்மையிலேயே சேதுவுக்கு அம்மாவிடம் அன்பு அதிகம்தான். அம்மா கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டான். சினிமாவுக்குப் போவதாக இருந்தால் கூட அம்மாவிடம் சொல்லிவிட்டுத்தான் போவான். அவனைப் பற்றித் தெரிந்தவர்கள் அத்தனை பேரும், ''அம்மாக்கோண்டு சேது'' என்று அவன் எதிரிலேயேகூடச் சொல்வதுண்டு. அது அம்மாவுக்கும் தெரியும். அந்தப் பட்டத்தை அம்மாவும் பிள்ளையும் தவறாக நினைக்க வில்லை. அது நியாயமான பட்டம் என்றே அவர்கள் வரையில் நினைத்தார்கள்.

படிப்பு முடிந்ததும் சேது சின்ன வேலையானாலும் போதும் என்று சென்னையிலேயே இருந்து விட்டான். அண்ணாக்கள் இருவரும் டில்லி, பம்பாய்க்குப் போனால் நல்ல வேலையாகக் கிடைக்கும் என்று எழுதியும் அவன் போகவில்லை. அம்மாவிடம் உள்ள அன்புதான் காரணம். அதை வாய்க்கு வாய் வருவோர் போவோரிடம் சொல்லிக் கொண்டிருப்பாள் சாவித்திரியம்மாள்.

இந்தப் பிள்ளைக்குக் கல்யாணத்தைத் தன் முழுப் பொறுப்பில் நடத்த அவள் நிச்சயித்ததில் தவறு உண்டா ? சேதுவின் தகப்பனார் ஏதோ சொல்ல வந்த போது, ''நீங்கள் பேசாமல் இருங்கள். நீங்கள்தான் முதல் இரண்டு பிள்ளைகளுக்கும் வடக்குக் கோடியில் ஒன்றும் தெற்குக் கோடியில் ஒன்றுமாகப் பண்ணி வைத்தீர்கள். நம்ம சேதுவுக்கு அந்த மாதிரி செய்யவிட மாட்டேன். சேதுவுக்கு வருபவள் எப்படி இருக்கணும், தெரியுமா? மூத்தவள் மாதிரிப் பெரிய அதிகாரியின் பெண்ணாக இருக்கக் கூடாது. அடுத்து வந்தவள் மாதிரி மிராசுதார் பெண்ணாகவும் இருக்கக் கூடாது. அவர்களுக்குச் சொத்து இருக்கணும்; ஆனால் ரொம்ப அதிகமாக இருக்கக் கூடாது. பெண் கொஞ்சம் படிச்சிருக்கணும். ஆனால் பெரியவள் மாதிரி டென்னிஸ் ஆடத் தெரிந்தவளாக இருக்கக் கூடாது. கண்ணைப் பறிக்கிற அழகுடையவளாக இருக்கக் கூடாது. அதற்காக விகாரமாகவும் இருக்கக் கூடாது. பெரிய சம்சாரிக் குடும்பமாக இருக்கக் கூடாது. அதற்காக இரண்டாவது மாதிரி பெண்ணை நினைத்துக் கண்ணைக் கசக்குகிற இடமாகவும் இருக்கக் கூடாது......'' என்று சொல்லி நிறுத்தி மூச்சு விட்டாள்.

''உன் இஷ்டப்படி செய்யம்மா. அதுதான் என் இஷ்டம்'' என்றான் 'அம்மாக் கோண்டு' சேது.

சேதுவுக்குக் கம்பெனி ஒன்றில் வேலை. வருஷத்துக்கு இரண்டு மாத போனஸ் உண்டு. வாரத்தில் சனி, ஞாயிறு இரண்டு நாட்களும் லீவு உண்டு. ஒரு வழியாகச் சேதுவுக்குப் பிரமோஷன் வந்தது. ஆனால் ஆபீசில் போட்ட நிபந்தனைதான் சேதுவுக்கு ஒத்துக் கொள்ளக் கூடியதாக இல்லை. டிரெயினிங் என்ற பெயரில் அவன் எட்டு மாதங்கள் திருச்சி கிளைக் காரியாலயத்தில் இருந்தாக வேண்டும்.

''எனக்குப் பிரமோஷன் வேண்டாம்மா. உன்னை விட்டுப் பிரிந்து எட்டு மாசங்கள் எப்படி இருப்பேன்?'' என்று உண்மையான மனகடன் சொன்னான் சேது.

அம்மாவுக்கும் அது சரி என்றுதான் பட்டது. ஆனால் அப்பாதான் ஒப்புக் கொள்ளவில்லை. ''ஒரு ஆறு மாதம் போய் இருந்துவிட்டு வந்துவிடு. இந்த வயசில் பிரமோஷன் தட்டிப் போனால், பிறகு கஷ்டம்'' என்றார்.

சேதுவுக்குப் போக இஷ்டம் இல்லைதான். எப்படியோ கிளம்பினான்.

திருச்சிக்குப் போன மறு வாரம் சனி ஞாயிறு லீவுக்குச் சென்னைக்கு வந்துவிட்டான். அதிலிருந்து வாரா வாரம் லீவுக்குச் சென்னை வந்து இரண்டு நாட்கள் அம்மா கையால் சாப்பிட்டு விட்டுப் போவதில் தவறுவதில்லை. இரண்டு மாதங்கள் இப்படிச் செய்ததும் அம்மாதான் சொன்னாள், ''உன்னை வரவேண்டாம் என்று சொல்லவும் முடியவில்லை. வா என்றும் சொல்ல முடியவில்லை. ஓய்வே இல்லாமல் இரண்டு நாட்கள் ரயில் பிரயாணம் செய்தால் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. அதனால் இங்கே வந்தால் அன்றே திரும்பிப் போய் ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொண்டு மறுநாள் ஆபீசுக்குப் போ'' என்று.

சேது அரைச் சம்மதத்துடன் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதித்தான்.

எப்படியோ ஒருவழியாக 'டிரெயினிங்'கை முடித்துக் கொண்டு மீண்டும் அம்மாவின் கையால் சாப்பிடச் சென்னைக்கே வந்து சேர்ந்து பழைய 'அம்மாக்கோண்டு' ஆனான்.

பிள்ளையின் கல்யாணத்துக்கு வந்த இடங்களில் ஒன்றாவது அம்மா போட்ட வரம்புக்குட்பட்டதாக இல்லை.

கடைசியாக வந்த ஓர் இடம் எல்லா விதத்திலும் அம்மாவுக்குத் திருப்தியான இடமாகத் தோன்றியது. பெண்ணின் தகப்பனார் மதுரையில் சர்க்கார் ஆபீஸ் ஒன்றில் சூபரின்டெண்டு (ஆபீசர் இல்லை). மற்றத் திட்டங்களும் ஒத்துக் கொண்டன.

பெண்ணைப் பார்க்க மதுரைக்குப் போகும் போது சாயங்காலம் வரை தங்குவதற்கு, எப்படியோ தன் தூரத்து உறவும் தன் இளம் பிராயத்துச் சிநேகிதியுமான ஜானகியின் நினைவு வந்து, அவள் விலாசத்தைத் தேடிப் பிடித்துக் கடிதமும் எழுதினாள் சாவித்திரியம்மாள்.

ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்










சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப் படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து. நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியையூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர் ஹிந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்

மதுரையில் ஜானகியின் வீட்டுக்குப் போய் ஸ்நானம் ஆனதும், மீனாட்சி அம்மன் கோயில், திருப்பரங்குன்றம், திருமலை நாயக்கர் மகால் எல்லா இடங்களுக்கும் பெற்றோர்களை அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்தான் சேது. புது ஊரில், பஸ்ஸில் ஏறுவதற்கும், மற்ற இடங்களுக்கும் தடுமாறாமல் நிதானமாகவும் இத்தனை சாமர்த்தியமாகவும் சேது நடந்துகொள்வதைப் பார்த்து, வாழ்க்கையிலேயே முதன் முதலாகத் தன் பிள்ளை வெறும் அம்மாக்கோண்டு மாத்திரம் இல்லை, உண்மையில் கெட்டிக்காரன் என்று அம்மா தெரிந்துகொண்டாள்.

பிற்பகல் சாப்பாடு முடிந்ததும் சேதுவும் நடேசனும் வாசல் பக்கம் இருந்த அறையில் படுத்துக் கொண்டு ஒரு தூக்கம் போட்டார்கள். சாவித்திரி அம்மாளும், ஜானகியும் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்து கொண்டு பழைய காலக் கதைகளைக் கொட்டி அளந்தார்கள். கடைசியில் ஜானகி கேட்டாள்: ''அதெல்லாம் இருக்கட்டும். உனக்கு இந்த இடம் எப்படித் தெரிந்தது? தெரிந்தவர்கள் யார் மூலமாவது ஜாதகம் வந்ததா?''

''யார்மூலம் தெரிகிறது என்ன? நம் வீட்டில் பிள்ளை இருக்கிறது. அவர்கள் வீட்டில் பெண் இருக்கிறது. வந்து கேட்கிறார்கள். ஆனால் என் மனசுக்குள் என்னவோ இது நல்ல இடம் என்று தோன்றுகிறது'' என்றாள் சாவித்திரி அம்மாள்.

''நான் சொல்கிறேனே என்று நினைத்துக் கொள்ளாதே. பின்னாடி எப்போதாவது உனக்கு விஷயம் தெரிந்தால் என்னிடம், 'முன்பே உனக்குத் தெரியாதா?' என்று நீ கேட்கும்படி இருக்கக் கூடாது என்பதற்காகச் சொல்கிறேன்''

''என்ன அது அப்படிப்பட்ட விஷயம்?''

''நீ பார்க்கப் போகிற பெண்ணைப் பற்றி.''

''என்னடி இது, பெரிய கல்லாகத் தூக்கிப் போடறே?''

''ஆமாம், பெரிய கல்தான். அந்தப் பெண் ஒரு வருஷத்துக்கு முன்னால் காலேஜில் படித்தாள். அப்போது யாரோ ஒரு பிள்ளையைக் காதலிச்சாளாம்....''

''அடி, பாவி!''

''காதல் என்றால் சாதாரணக் காதல் இல்லையாம். அவனோடு சேர்ந்து கொண்டு சினிமா, நாடகம், திருப்பரங்குன்றம், வைகை அணை, அழகர்மலை என்று போகாத இடம் பாக்கியில்லையாம்.''

''என்னடி சொல்கிறே, நீ....?'' என்று மலைத்துப் போனாள் சாவித்திரியம்மாள்.

''நான் கேள்விப்பட்டதைச் சொல்கிறேன். வடக்கு மாசி வீதியில் அத்தனை வீடுகளுக்கும் செய்தி தெரிந்து சிரிப்பாய்ச் சிரித்த பிறகுதான் பெற்றவர்கள் காதுக்கு எட்டிற்றாம். அவர்கள் உடனே பெண்ணின் படிப்பைப் பாதியில் நிறுத்தி விட்டார்களாம்....''

''அடி பாவி....''

''பிறகு அந்தப் பெண், 'அந்தப் பையனைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன். இல்லாவிட்டால் கிணற்றில் விழுந்துவிடுவேன்' என்றாளாம்......''

''விழுந்துதொலைத்திருக்கக் கூடாதோ?''

ஜோதி

'' வாங்கோ! மாப்பிள்ளே !! வஸந்தாவுக்கு ரெட்டைப் பிள்ளை பிறந்திருக்கு !''

'' இவள் எப்பவுமே இப்படித்தான்! நான் ஒன்னு சொன்னா இரண்டாகச் செய்து வைப்பாள்! சே !!''

''என்னமோ விழவில்லை. பெண், காதல் கல்யாணம் செய்து கொள்வது பெற்றவர்களுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. அவள் இந்த விஷயத்தை மறக்க வேண்டும் என்று ஒரு வருஷமாகக் கல்யாணப் பேச்சை எடுக்காமல் இருந்துவிட்டு இப்போது கல்யாணத்தை முடித்துவிடத் தீவிரமாக இருக்கிறார்கள்.......''

சாவித்திரி அம்மாள் வாயடைத்துப் போனாள். என்ன செய்வது என்று தெரியாமல் குமைந்து கொண்டிருந்த போது, பெண்ணைப் பெற்றவர் பெண் பார்க்க அழைத்துப் போக வந்து விட்டார்.

பெண் நன்றாக இருந்தாள். முதற் பார்வையிலேயே மனசில் பதிந்த பெண்ணைப் பார்த்துவிட்டு அந்தக் கதையையும் நினைத்துப் பார்த்தபோது சாவித்திரியம்மாளுக்கு ஒரே வெறுப்பாக வந்தது. 'கல்யாணம் ஆவதற்குமுன் ஒரு பையனுடன் சினிமா, நாடகம், வைகை அணை என்று சுற்றுவதாக இருந்தால் அந்தப் பெண்ணுக்கு எத்தனை நெஞ்சுரமும் துணிச்சலும் இருக்க வேண்டும்? இவளைத் தன் வீட்டுக்கு மருமகளாக அழைத்தால் வெறும் 'அம்மாக்கோண்டு' என்று மற்றவர்கள் சொல்லும் அளவுக்கு ஒன்றும் தெரியாத பிள்ளையான சேதுவையும் தன்னையும் அவள் எப்படி ஆட்டி வைப்பாள்? என்ன ஆனாலும் இந்தப் பெண் வேண்டாம்......'

சம்பிரதாயப் பேச்சுகள் முடிந்து பிள்ளை வீட்டுக்காரர்கள் எழுந்ததும் சாவித்திரி அம்மாளை முந்திக் கொண்டு, ''ஊருக்குப் போய்க் கடிதாசி போடுகிறோம்'' என்று

சொல்லிவிட்டுக் கிளம்பினான். அம்மாவின் முகத்தைப் பார்த்து ஒன்றுமே புரிந்து கொள்ள முடியாமல் தவித்தான் சேது. அவள் கணவருக்கோ என்றைக்குமே அவள் செய்கைகள் புரிந்ததில்லை.

சென்னைக்கு வந்து இரண்டு மூன்று நாட்கள் ஆனபிறகு அம்மா சொன்னாள். ''சேது! மறுபடியும் வேறு ஒரு ஜோசியரிடம் மதுரைப் பெண் ஜாதகத்தைக் காண்பிச்சேன். அவர் இந்த ஜாதகம் பொருந்தவில்லை, இந்த இடம் வேண்டாம்'' என்கிறார்......'' என்றாள்.

''என்னம்மா இது. பெண் பார்க்கப் போவதற்கு முன்னால் இரண்டு பேரிடம் காண்பித்த போது பொருந்தியிருக்கிறது என்றார்களே'' என்று தன்னை மீறிய வேகத்துடன் குதித்தான் பிள்ளை.

பிள்ளை தன் பிடியிலிருந்து நழுவ ஆரம்பிப்பதைச் சாவித்திரியம்மாள் உணர்ந்தாள்.

''ஏண்டா, இரண்டு பேரிடம் காண்பித்தால் மூன்றாவது பேரிடமும் காண்பிக்கக் கூடாது என்று ஏதாவது சாஸ்திரமா.....?'' என்றாள் அவள்.

பட்டாபி சொன்னார். ''எனக்கு என்னவோ சேதுவுக்கு வந்திருக்கும் இந்த இடம் மிகவும் பிடித்திருக்கிறது. அந்த மனிதரின் மரியாதையும் பணிவும், பெண்ணின் அழகும் எல்லாமே சரியாக இருப்பவை போலத்தான் தோன்றுகிறது.....''

சேது அம்மாவின் முகத்தைத் தைரியமாகப் பார்த்துக் கொண்டே சொன்னான். ''இந்தப் பெண்ணே பரவாயில்லை. ஜாதகம் கொஞ்சம் முன்னே பின்னே இருந்தால் என்ன ?நான் அட்ஜஸ்ட் செய்து கொள்கிறேன். இந்தப் பெண்ணைத்தான் எனக்குக் கொஞ்சம் பிடிச்ச மாதிரி இருக்கிறது......''

''எனக்கும்தான்....'' என்றார் பட்டாபி.

''முடியாது. எனக்கு இஷ்டம் இல்லை. இந்த இடத்தில் நடக்க நான் விடமாட்டேன்'' என்றாள் அவன் அம்மா.

''என்ன காரணத்தினால் என்று நீ சொல்லியாக வேண்டும். ஜாதகம் பொருந்தவில்லை என்று நீ சொல்வது பொய். உன் மனசுக்குள் வேறு ஏதோ இருக்கிறது. உன் மனசில் தோன்றிய ஏதோ அசட்டு யோசனைக்காக அநியாயமாக ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்கி விடாதே..'' என்று கண்களில் கண்ணீர் வராத குறையாகச் சொன்ன பிள்ளையைப் பார்த்து, ''அட, பாவி !'' என்றாள் அம்மா.

''இந்த இடம் வேண்டாம். ஏன் வேண்டாம் என்பதை என் வாயால் சொல்ல வேண்டாம் என்றுதான் பார்த்தேன். இந்தப் பெண் முன்னால் யாரையோ காதலிச்சாளாம். விஷயம் ரொம்ப தூரம் முற்றிப் போய் அந்தக் காலிப் பயலுடன் அவள் சேர்ந்து சினிமா, நாடகம், வைகை அணை என்று ஒரு இடம் பாக்கிவிடவில்லையாம். வடக்கு மாசி வீதி முழுவதும் 'கொல்' என்று போய் விட்டதாம்.

''இதெல்லாம் உனக்கு யார் சொன்னது?''

''யார் சொன்னால் என்ன? ஓர் இடத்துக்கு இரண்டு இடமாக விசாரித்துவிட்டேன். பெண்ணின் அம்மாவிடம்கூட ஜாடையாகக் கேட்டு விட்டேன்.....''

''அந்தப் பையன் நான்தானம்மா....'' என்று சோகக் குரலில் சொன்னான் பிள்ளை.

''என்னடா, சொல்றே ? சொப்பனம் ஏதாவது கண்டியா ?''

''சொப்பனம் எதுவும் இல்லேம்மா. வாஸ்தவத்திலே நான்தான் அந்தப் பெண்ணைக் காதலிச்சேன். அவளை சினிமாவுக்கும் நாடகத்துக்கும் வைகை அணைக்கும் நான் தான் அழைச்சிண்டு போனேன்....''

''என்னடா, சொல்றே, நீ.....?''

''ஆமாம்மா. போன வருஷம் நான் திருச்சிக்குப் போய் முதல் இரண்டு மாதங்கள் சனி ஞாயிறு லீவுக்கு இங்கே வந்தபோது நீ ஒரு நாள் லீவுக்கு இங்கே இருந்தால் போதும். மறு நாள் திருச்சிக்கே போய் ஓய்வு எடுத்துக்கொள் என்று சொன்னாய். மறுநாள் நான் திருச்சிக்குப் போகாமல் மதுரைக்குப் போனேன். கோயிலுக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தபோது இந்தப் பெண்ணைப் பார்த்தேன். எனக்கு என்னமோ மீனாட்சி அம்மன் சிலையே உயிர் பெற்று வந்த மாதிரி இருந்தது......''

''அட பாவி.......''

''... அடுத்த வாரமும் மதுரைக்குப் போனேன். அவள் பின்னாடியே வீட்டுவாசல் வரை போனேன். அவள் காலேஜிலே படிச்சிண்டிருந்தாள். அதனாலே வீட்டுக்குத் தெரியாமல் சினிமாவுக்கும் மற்ற இடங்களுக்கும் போகச் சௌகரியமாக இருந்தது.......''

'' உன்னை அந்தப் பெண்ணின் அப்பாவுக்குத் தெரியுமா.....?'' — அப்பா.

''தெரியாது. அவர் என்னைப் பார்த்ததில்லை. யார் மூலமாகவோ அந்தப் பெண்ணின் விஷயம் அவள் அப்பாவுக்குத் தெரிய, மறுநாளிலிருந்து அவர் பெண்ணை வீட்டைவிட்டு வெளியில் அனுப்பவில்லை. அவ்வளவுதான். அதற்குள் எனக்கும் டிரெயினிங் முடிந்து இங்கு வந்து விட்டேன்.....''

''பின் நம் விலாசம் எப்படி அவர்களுக்குத் தெரிந்து ஜாதகம் அனுப்பினார்கள்?''

''அதைப் பற்றி இப்போ என்ன? யார் மூலமாகத் தெரிகிறது என்பதா முக்கியம் ?''

''எனக்குத் தலையைச் சுற்றுகிறது. என்ன செய்கிறது என்று ஒன்றுமே புரியவில்லை....'' என்று சாவித்திரியம்மாள் ஓய்ந்து போய் உட்கார்ந்தாள்.

''எனக்குப் புரிகிறது. டேய், சேது. மதுரை ரயிலுக்கு இன்னும் எத்தனை டயம்டா இருக்கு? நீ போய்ச் சீக்கிரம் ஒரு டாக்ஸி பிடித்துக் கொண்டு வா. மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்....'' என்று பட்டாபி தம் வாழ்க்கையில் முதன் முதலாக மனைவியைக் கலந்து கொள்ளாமல் தீர்மானம் செய்தார்.

அம்மாவிடம் ஒரு வார்த்தைகூடக் கேட்காமல் சட்டை போட்டுக் கொள்ளவும் மறந்து டாக்ஸி பிடித்துக் கொண்டு வர வெளியில் ஓடும் பிள்ளையைப் பார்த்து, ''இந்தச் சேது இனிமேல் அம்மாக்கோண்டு சேது இல்லை!'' என்பதைச் சாவித்திரியம்மாள் உணர்ந்து கொண்டாள்.

சுளுக்குகள்
வீக்கங்கள்
பிடிப்பு மற்றும்
தசை வலிகள்

IODEX
c METHYL SALICYL

தேய்த்து - வலியைப்போக்கி இதமளியுங்கள்

# அயொடெக்ஸ் ®

IODEX®

தேகாரோக்கியத்திற்கு மருந்து தயாரிப்பில் முன்னோடிகள்

ஸ்மித் கிளைன் & பிரெஞ்ச (இந்தியா) லிட்., பம்பாய் - 1
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் இங்கிலாந்தில் இணைப்பு)




- சமாதி கட்டவேண்டும்!
- அழகான கதை
- இலவசப் படிப்பா?
- தேவையற்ற கெடுபிடி

ரூபாயின் மதிப்பைக் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் திடீரென்று குறைத்துவிட்டதைக் கண்டு மக்கள் அதிர்ச்சியடைந்தாலும் நமது ஒப்பற்ற தலைவர் தந்தை ராஜாஜி அவர்கள் தெரிவித்துள்ளபடி காங்கிரஸ் ஆட்சியை அநுமதித்தவர்களுக்கு அதிர்ச்சி அடைய உரிமையில்லைதான்.

சென்ற பதினெட்டு ஆண்டு காங்கிரஸ் ஆட்சியில் நாடு எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறது என்பதற்கு இதுவே சிறந்த அத்தாட்சியாகும்!

காங்கிரஸ்காரர்களின் விபரீதக் கொள்கையால் நாட்டின் பொருளாதாரம் நாளுக்கு நாள் சீர்குலைந்து கொண்டே வருகிறது என்பதைச் சுதந்திரக் கட்சித் தலைவர்கள் பார்லிமெண்டிலும், பார்லிமெண்டுக்கு வெளியேயும் பல தடவை எடுத்துக் கூறியும், தங்களிடம் மெஜாரிட்டி பலம் இருக்கிறது என்கிற மமதையில் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் வாளாவிருந்து விட்டார்கள்.

சென்ற ஆண்டில் பார்லிமெண்டில் பேசிய தயாபாய் படேல் எம். பி., "ரூபாயின் மதிப்பு பதினான்கு பைசாவுக்குக் குறைந்து விட்டது. நேருவின் தலையை ஒரு ரூபாய் நாணயத்தில் வெளியிட்டால் மாத்திரம் அதன் மதிப்பு பதினான்கு பைசாவுக்கு மேல் உயர்ந்து விடாது" என்று கூறினார்.

அஸ்ஸாம் மாநிலத்தின் தலைநகரான ஷில்லாங் நகரில் 1965ம் ஆண்டு ஜூலை 12ம் தேதி ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிய சுதந்திரக் கட்சி பொதுச் செயலாளர் எம். ஆர் மஸானி, "ரூபாயின் மதிப்பு சர்வதேசச் சந்தையில் பாதியாகவும், உள்நாட்டில் பதினான்கு பைசாவாகவும் குறைந்து விட்டது." என்று குறிப்பிட்டார்.

இதிலிருந்து ஒன்று நிச்சயமாகத் தெரிகிறது. காங்கிரஸ் ஆட்சியினரின் சர்வநாசப் போக்கிலிருந்து மக்கள் விமோசனம் பெற, அவர்கள் ராஜாஜியின் பின்னால் அணிவகுத்து நின்று 1967 பொதுத் தேர்தலில் காங்கிரஸ் ஆட்சிக்குச் சமாதி கட்ட வேண்டியதுதான். அதைச் செய்யாதவரையில் மக்களுக்குக் கதிமோட்சமே கிடையாது.

திருவண்ணாமலை
9-6-66 கே. வி. ராமதுரை

தகழி சிவசங்கரம்பிள்ளையின் சிறுகதை "விவசாயி" என் இதயத்தைப் பதமாக்கிற்று. மலையாளத் திரைப்படம் செம்மீனின் ஆசிரியரை, உலகப் புகழ் உச்சிக்கு அவரை உயர்த்திய அவரது இதயப் பண்பை, இந்திய ஜனாதிபதியின் தங்கப் பதக்கப் பரிசின் மூலம் மட்டுமல்ல, இச்சிறுகதையின் மூலமும் உணரலாம்.

காளாச்சேரி
13-6-66 ஆ. நடனம்

இன்றைய விலைவாசிகள் ஏறுமுகமாக உள்ள நிலையில் பள்ளிகளில் குழந்தைகளைப் படிக்க வைப்பதென்பது மிகவும் சிரமமான காரியமாயுள்ளது. பதினோராவது வகுப்பு வரை பள்ளிப் படிப்பை இலவசமாக அரசாங்கம் கொடுத்தும், எந்த நன்மையும் இல்லை. ஏனெனில், பள்ளியில் பிள்ளைகளைச் சேர்ப்பதற்குப் பள்ளி அதிகாரிகள் ஒரு வருட சம்பளத்துக்கும் அதிகமாகவே நன்கொடை என்ற பெயரில் வசூலிக்கின்றனர். இதைக் கொடுக்க இயலாத பிள்ளைகளுக்குப் பள்ளியில் இடமில்லை எனக் கூறி அனுமதிப்பதில்லை. ரூபாய் முப்பதோ-ஐம்பதோ கொடுக்க வசதியில்லாப் பெற்றோர்களின் குழந்தைகள் இதனால் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள்.

திருவொற்றியூர்
14-6-66 கே. ஜி. கோபாலகிருட்டிணன்

தமிழக நெற்களஞ்சியம் எனப் புகழ் பெற்ற தஞ்சையிலேயே கடந்த ஒரு வாரமாக அரிசித் தட்டுப்பாடு. சில்லறை வியாபாரிகள் அரிசி கிடைக்காமல் கடைகளை மூடிவிட்டார்கள். சர்க்கார் சலுகை பெற்ற கூட்டுறவு சங்கங்களின் வாயிலில் பொது மக்கள் அரிசிக்காக "க்யூ" வரிசையில் நிற்பது பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது.

தேவையுள்ள அரிசி கிடைக்கும் என்பது உறுதியானால் கூட்டுறவு சங்க வாயிலில் அரிசிக்காக "க்யூ" வரிசையில் நிற்க வேண்டிய அவசியம் என்ன? கூட்டுறவுச் சங்கங்கள் தவிர, நகரில் உள்ள இதர லைசென்ஸ் பெற்ற சில்லறை அரிசி வியாபாரிகளுக்கும் சப்ளை செய்தால் பொதுமக்களுக்கும் முக்கியமாக அன்றாடம் கூலி வேலை செய்பவர்களுக்கும் வசதியாக இருக்குமே?

இதுபற்றி வினவிய தினமணி பத்திரிகை நிருபரிடம், "இருக்கும் ஸ்டாக்குகளைக் கொண்டு முடிந்த அளவுதான் செய்ய இயலும்" என்று ஜில்லா சப்ளை அதிகாரி சென்ற 9-6-66ல் கூறியிருக்கிறார். இதிலிருந்தே, அரசாங்கம் உண்மையைக் காண மறுக்கிறது என்பதும் தேவையற்ற கண்ட்ரோல்களைக் கொணர்ந்து தன்னால் நிர்வகிக்க முடியாத அளவுக்குத் தானிய வியாபாரத்திலும் பிற இனங்களிலும் ஈடுபட்டிருக்கிறது என்பதும் தெளிவாகிறது.

தஞ்சாவூர்
10-6-66 பி. சுப்பிரமணியம்

Edited printed & published by T Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10



# மாறாத புலியின் தோலைப் போல மாறவே மாறாத புள்ளிக் கோலம்

...அதேபோல் உயர்தர, மென்மைப் பண்பு! வண்ணத்தை இழக்கவும் செய்யாது. மபத்லால் க்ரூப் ஷர்ட்டிங்குகள் புள்ளிபோட்டும், கோடுபோட்டும், சாதாவாக அல்லது கட்டம் போட்டும் வருகின்றன. அணிந்து பாருங்கள். பிறகு வேறெதிலுமே உங்களுக்குத் திருப்தி ஏற்படாது!

## மபத்லால் க்ரூப்



மஃ.பினிஸ்டு. மற்றும் டெபிலைஸ்டு ரகங்களில் வருகின்றன.

நியூ ஷொராக் (ஷொராக்) அஹமதாபாத்
நியூஷொராக், நடியாத். ஸ்டேண்டர்ட், பம்பாய்
ஸ்டேண்டர்ட், (நியூ சைனா) பம்பாய்
ஸ்டேண்டர்ட் தேவால். ஸாஸூன், பம்பாய்
ஸாஸூன் (நியூ யூனியன்) பம்பாய்
ஸூரத் காட்டன், ஸூரத்
மபத்லால் பைன், நவ்ஸாரி

LPE Alyars. M. 102 TM

REGISTERED No. M. 4397
Registered as a Newspaper in Ceylon